உ
சிவமயம்.

# சிவஞானபோதச்
# சிற்றுரையும் விளக்கமும்

*

சிதம்பரம் சுத்தாத்துவித சைவ சித்தாந்தப்
பேராசிரியர்
**சபா. சிவப்பிரகாசம் பிள்ளை அவர்களால்**
**மிக எளிய நடையில் எழுதப்பெற்றது.**

*

ஸ்ரீ சுவேதாரண்யேஸ்வர ஸ்வாமி
தேவஸ்தானம்,
திருவெண்காடு.
சீர்காழி தாலூகா : : தஞ்சை மாவட்டம்

Rs 2/-
45-1

உ

சிவமயம்.



# சிவஞானபோதச்
# சிற்றுரையும் விளக்கமும்

---

து. உலகநாதன்

❋

சிதம்பரம் சுத்தாத்துவித சைவ சித்தாந்தப்
பேராசிரியர்

**சுபா. சிவப்பிரகாசம் பிள்ளை அவர்களால்**

**மிக எளிய நடையில் எழுதப்பெற்றது.**




❋

**ஸ்ரீ சுவேதாரண்யேஸ்வர ஸ்வாமி**
**தேவஸ்தானம்,**
**திருவெண்காடு.**

சீர்காழி தாலூகா : : தஞ்சை மாவட்டம்

௨

ஸ்ரீ மெய்கண்ட தேவன் திருவடி வாழ்க.

பதிப்பு :
தஞ்சாவூர்
நடராஜ பிள்ளை உலகநாதன் M.A.B.T

சிவஞான பரம்பரையிற் சிவஞான பானுவாக ஒளிரும் **மெய்கண்டார்** அருளிய **சிவஞானபோதம்** என்னும் உயர் சாத்திரத்திற்கு சிதம்பரம் சுத்தாத்துவித சைவ சித்தாந்தப் பேராசிரியர் திரு. **சபா. சிவப்பிரகாசம் பிள்ளை** அவர்கள் எளிமையும் எழிலும் கொஞ்ச உரை கண்டுள்ள **சிவஞானபோதச் சிற்றுரையும் விளக்கமும்** என்ற இந்நூலை திருவெண்காடு ஸ்ரீ சுவேதாரண்யேஸ்வர ஸ்வாமி தேவஸ்தான வெளியீடாக வெளியிடுவதில் மகிழ்வு கொள்கின்றோம்.

சிவஞான போதத் திருப்பாடற் கல்வெட்டு திறப்பு விழா நினைவு மலராக ( ஸ்ரீ மெய்கண்டான் ஆண்டு 736 ) நிகழும் விகாரி ஆண்டு பங்குனி மீ 27உ ( 9—4—60 ) சென்னை மாநில அறநிலையப் பாதுகாப்புத் துறை ஆணையாளர் உயர்சைவத்திரு **அ. உத்தண்டராம பிள்ளை, B. A., B.L., I. A. S.** அவர்களது அருளாசியுடன் வெளியிடப் பெறுவது இந்நூலுக்கு மேலும் சிறப்பையும், பெருமையையும் கூட்டுகின்றது.

*இந்நூலுக்கு சிறப்புரை அருளிய திருப்பனந்தாள் ஸ்ரீலஸ்ரீ காசிவாசி அருள் நந்தித் தம்பிரான் அவர்கட்கும், முகவுரை வழங்கிய அறநிலையப் பாதுகாப்புத் துறை ஆணையாளர் திரு. அ. உத்தண்டராம பிள்ளை அவர்கட்கும், சீரிய முறையில் உரை கண்ட திரு. சபா. சிவப்பிரகாசம் பிள்ளை அவர்கட்கும் எங்கள் பணிவான நன்றியைச் சமர்ப்பிக்கின்றோம்.*

*இந்நூலை கசடறக் கற்று, கற்ற வழி நின்று மெய் இன்பம் பெற்றுய்ய வேண்டுகின்றோம்.*

**N. கோவிந்தசாமி பிள்ளை,**
இறைபணியாளன்.

*திருவெண்காடு,*
*9—4—60.*

**K. சின்னசாமிதுரை,**
(நிர்வாக தர்மகர்த்தா)

**K. கனகசபை பிள்ளை,**

**S. சுப்பிரமணிய பிள்ளை,**
(தர்மகர்த்தாக்கள்)

உ
சேந்திலாண்டவன் துணை.



ஸ்ரீலஸ்ரீ காசிவாசி
**அருள்நந்தித் தம்பிரான் அவர்கள்,**
திருப்பனந்தாள்.

( தஞ்சாவூர் ஜில்லா )
5—4—1960.

# சிறப்புரை.

" வேதம் பசு; அதன்பால் மெய்யா கமம்; நால்வர்
ஓதும் தமிழதனின் உள்ளுறுநெய் - போதமிகு
நெய்யின் உறுசுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்ததமிழ் நூலின் திறம்"

என்னும் பாடல் சிவஞானபோதம் எத்தகைய சிறப்புடையது என்பதைத் தெரிவிக்கிறது.

சிவஞான பரம்பரையிற் சிவஞானபானுவாகத் திகழ்ந்தவர் **மெய்கண்டார்**; இவர் அருளிய சாத்திரம் **சிவஞானபோதம்**. இச்சாத்திரத் தலைநூல் **12** சூத்திரங் களையுடையது. இச்சிவஞானபோத சூத்திரங்களைப்

பக்தர்கள் யாவரும் பார்த்துப் படிக்கவேண்டும் என்ற நோக்குடன் திருவெண்காட்டில் மெய்கண்டார் திருக்கோயிலில் பதிப்பிக்கப்பெறுகின்றன. மெய்கண்டார் திருவவதாரம் செய்வதற்குத் திருவருட் குறிப்பாயமைந்தது திருவெண்காட்டுத் தேவாரம். ஆதலின் திருவெண்காட்டில் சிவஞானபோதக் கல்வெட்டுத் திறப்பு நாளில் சிவஞானபோதம் எளியவுரையுடன் தேவஸ்தான வெளியீடாக வெளிப்படுத்தப் பெறுகின்றது.

இந்நூற்கு உரை எழுதியவர் பழுத்த சைவ சித்தாந்த வல்லுநர்.

சைவ சமயத்தில் இடையறு அன்பு பூண்டு நிற்பவரும், கையில் உழவாரமும் மெய்யில் திருநீறும் திகழப்பெற்றவரும், தலங்கள் தோறும் சென்று திருப்பணி செய்துவருபவரும், சாத்திரத்தை நன்கு கற்று அதற்குத் தக நடக்கும் சைவ சீலமுடையவரும், அறநிலையப் பாது காப்புத் தலைவரும் ஆகிய பேரன்பர் திரு. **உத்தண்டராமப் பிள்ளை**, I. A. S. அவர்கள் இந்நூலை வெளியிடுபவர் ஆவர்.

இந்நூலை யாவரும் கற்றுச் சைவ சமய நெறியில் நின்று பதிபசு பாசங்களின் உண்மை தெளிந்து, **ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்** அருளிய வண்ணம் 'ஓரும் வேதாந்தத்துச்சியிற் பழுத்த சாரங்கொண்ட சைவ சித்தாந்தத் தேனமுது' பருகி உய்வாராகுக.

வாழ்க சீர் அடியார் எல்லாம்.

**சிவ சிவ**

# முகவுரை.

" வேதம் பசு அதன்பால் மெய்யாகமம் நால்வர்
ஓது தமிழ் அதனுள்ளூறு நெய்—போதமிகு
நெய்யினுறு சுவையாம் நீள்வெண்ணெய் மெய்கண்டான்
செய்த தமிழ் நூலின் றிறம்."

" எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப் பொருள் காண்பதறிவு."

" சார்புணர்ந்து சார்புகெட ஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரு நோய் "

" தன்னைப் பரனைச் சதாசிவன் என்கின்ற
மன்னைப் பதிபசு பாசத்தை மாசற்ற
முன்னைப் பழமல முன்கட்டை வீட்டினை
உன்னத் தகுஞ் சுத்த சைவர் உபாயமே."

*உலகில் உள்ள மக்கள் முதல் உயிர்களனைத்தும் விரும்புவது இன்பம். உலகத்தில் பெறும் உடல் இன்பம் நிலையற்றது. உயிர்க்குறுதி பயக்கும் நிலைபெற்ற பேரின்பம் பெறும் வழியைக்காண முயன்றனர் ஞானியர். மக்களது அறிவு நிலைமைக்கேற்ப அவர்கள் காணும் வழிகள் அமைந்து வெவ்வேறு சமயங்கள் தோன்றின.*

"விலகிவீழ் அருவித் தாரைவேறு வேருகஓடிக்
குலநதிப் பாலிவைப்பின் ஏகமாய்க்கூடும் தோற்றம்
அலகில் பல்வழியும் மூதூர் அணிமையின் ஒன்ருமாறும்
பலபல மதமும் ஒருவழிப் படலும் போலும்"

*என்றார் மாதவச் சிவஞான யோகிகள்.*

*ஒன்ருெடொன்று ஒவ்வாமல் உள்ள பல சமயங்களுள் எது உண்மைச் சமயம் என்ற வினவிற்கு சிவஞான சித்தியாரில்*

"இதுஆகும் அது அல்லது எனும் பிணக்கது இன்றி
நீதியினல் இவைஎல்லாம் ஓர் இடத்தேகாண
நின்றது யாதொருசமயம் அதுசமயம் பொருள்நூல்"

என்ற விடை காண்கின்றோம். இவ்வாறு ஏனைய சமயங்களை யெல்லாம் தழுவிக்கொண்டு அவை கூறும் மெய்ப் பொருள்களைத் தன்னகத்தே கொண்டுள்ளது சைவ சித்தாந்தம்.

"விரிவிலா அறிவினர்கள் வேறொருசமயம் செய்தே
எரிவினற் சொன்னாரேனும் எம்பிராற்கு ஏற்றதாகும்"

என்றார் அப்பர் பெருமானும்.

சைவ சித்தாந்த நூல்கள் தேவாரம் முதல் திருத் தொண்டர் புராணம் என்ற பெரிய புராணம் ஈருகவுள்ள பன்னிரு திருமுறைகளாகிய தோத்திர நூல்களும் உந்தி, களிறு, சிவஞான போதம் முதலிய பதினன்கு சாத்திர நூல்களுமாம். இவற்றுள் சைவ சித்தாந்த அடிப்படைத் தத்துவங்களை விளக்குவது மெய்கண்டார் அருளிய சிவ ஞான போதம் என்னும் அரிய ஞானநூல். வடிவிற் சிறியது. பன்னிரண்டு சூத்திரங்களையும் முப்பத்தொன்பது அதிகரணங்களையும் கொண்டது.

"பதி பசுபாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப்போல் பசு பாசம் அநாதி
பதியினைச் சென்றணுகா பசு பாசம்
பதியணுகிற் பசுபாச நில்லாவே"

என்பது திருமந்திரம். இம் முப்பொருளுண்மையே சைவ சித்தாந்தத்தின் தனிப்பெருமை. பகுத்தறிவால் மெய்ப் பொருள் காண முயல்வாருக்கு மெய்ப்பொருள் அறியும் வழிகாட்டி, உதவும் சாதனம். இதன் பன்னிரண்டு சூத்திரங்களிலும் முறையே பதியுண்மை, பாசவுண்மை, பசுவுண்மை, பசுவிலக்கணம், பாசவிலக்கணம், பதிப் பொருள் இலக்கணம், ஆன்ம சொரூபம், ஞானதரிசனம்,

சாதனம் செய்யும் வழி, ஏகனுகி இறைபணி நிற்றல், அரனடி அணைதல், அணைந்தோர் தன்மை என்னும் சித்தாந்தக் கருத்துக்களைத் தெளிய உணர்த்துகின்றன. இவ்வரிய ஞானநூலுக்குப் பல உரைகள் உள. திருவாவடுதுறை ஆதீனத்தைச் சேர்ந்த திராவிட மாபாடிய கர்த்தரென விளங்கிய ஸ்ரீ மாதவச் சிவஞான சுவாமிகள் ஒரு சிற்றுரையும் ஒரு பேருரையும் அருளிச் செய்துள்ளார்கள். அன்னார் சிற்றுரையைத் தழுவி சிதம்பரம் உயர்திரு **சபா. சிவப்பிரகாசம் பிள்ளை** என்ற புலவர் பெருமான் ஓர் அரிய சிற்றுரைச் சுருக்கம் எழுதியுள்ளார். மேற்சொன்ன உரைகளைப் பயிலுமுன் இச்சிற்றுரைச் சுருக்கம் எல்லோருக்கும் எளிதில் பயன்படும் முறையில் எழுதப்பெற்றுள்ளது. சைவவுலகம், தனது 85வது வயதிலும் சமயத்தொண்டாற்றி வரும் இப்புலவர் பெருமானுக்கு மிகவும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டுள்ளது. இதனை அச்சிட்டு வெளியிட முன்வந்த திருவெண்காட்டீஸ்வரர் ஆலய நிர்வாகக் குழுவினரும், அதன் தலைவர் உயர்திரு **கை. கனகசபை பிள்ளை**யவர்களும் சைவ உலகின் நன்றிக்கு உரியவர்களே. மெய்கண்டார் அவதாரத்துக்குக் காரணமான முக்குள நீர்நிலையங்களைக் கொண்ட திருவெண்காட்டீஸ்வரர் திருவருள் துணைக்கொண்டு இவ்வுரை வெளிவருவதும் சாலப் பொருத்தமே.

"மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகமெல்லாம்"

**அ. உத்தண்டராமன், B. A., B.L., I. A. S.,**
சென்னை அறநிலையப் பாதுகாப்புத் துறை ஆணையாளர்

உ
கற்பகந் துணை

# ஆசிரியர் உரை

கடவுளால் அருளிச் செய்யப் பெற்ற நூல்கள் வேதங்களும் ஆகமங்களுமாம். மற்றை எல்லா நூல்களும் இந்த இரண்டு நூல்களிலிருந்து விரிந்து விளங்கிய நூல்களேயாம். உலகிலுள்ள எல்லா நூல்களின் கருத்துக்கள் **கடவுள்** உண்டு. **உயிர்** உண்டு. **உலகம்** உண்டு என்பதேயாம். இந்த மூன்று கருத்துக்களையே சித்தாந்த சாத்திரங்கள் சொல்லுகின்றன. அதனுல் சித்தாந்த சாத்திரங்களைப் படித்து உணர்ந்தவர்கள் ஒரே பிறப்பில் சீவன் முத்தராக ஆவர் என்று பெரியோர் கூறியுள்ளார். அந்த சித்தாந்த சாத்திரங்கள் பதினன்கு நூல்கள். அந்த நூல்களை யாரும் தானே படித்து அறிந்துகொள்ள முடியாது. குருவினிடத்திலேயே கேட்டுத் தெரிந்து கொள்ளல் வேண்டும் அப்பதினன்கு நூல்களில் முதல்நூல் **சிவஞான போதம்**. அந்த சிவஞான போதத்துக்கு மாதவச் சிவஞான முனிவர் செய்தருளியது சிவஞானபோத மாபாடியமும் சிவஞானபோதச் சிற்றுரையுமாம். சிவஞானபோதச் சிற்றுரை கேட்டே சிவஞானபோத மாபாடியம் கேட்க வேண்டும். சிவஞானபோதச் சிற்றுரையையே யாவரும் முன்னர் கற்றுணர வேண்டி கருத்து வேறுபடாமல் குருவினிடம் யான் கேட்டவாறே சிவஞானபோதச் சிற்றுரைச் சுருக்கம் என்னும் இந்நூலை வெளியிட்டிருக்கிறேன், இதனை யாவரும் கூடியவாறு சிறிது சிறிதாகக் கற்றுணர்ந்தால் மாதவச் சிவஞான முனிவர் இயற்றிய சிற்றுரையை எளிதில் கேட்டு உணரலாம் என்பது எனது துணிபு. பின்பு பேருரை கேட்கலாம். குறைகளைத் தெரிவித்தல் அறிஞர்களின் அருள்.

இங்ஙனம்,

**சபா. சிவப்பிரகாசம் பிள்ளை**
**சுத்தாத்துவித சைவ சித்தாந்தப் பேராசிரியர்,**
12, பழஞ்சாலியத் தெரு, சிதம்பரம்.

145 - 1



உரையாசிரியர் சபா. சிவப்பிரகாசம் பிள்ளை.

## சிவஞான போத நூல் செய்தருளிய

# மெய்கண்ட தேவ நாயனார் வரலாறு.

பெண்ணாகடம் என்ற ஊரிலே கார்காத்த வேளாளர் குலத்திலே அச்சுதகளப்பாள பிள்ளை என்பவர் ஒருவர் இருந்தார். அவருக்கு மகப்பேறு இல்லை. அதனால் திருத்துறையூர் சகல ஆகம பண்டிதரிடம் தனது குறையைக் கூறினார். அப்பண்டிதர் தேவாரத் திருமுறையில் கயிறு சார்த்திப் பார்த்தார். 'பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோடுள்ள நினைவாயினவே வாம்பெறுவர் ஐயுறவேண்டா வொன்றும்' என்ற திருவெண்காட்டுப் பதிகம் உதயமாயிற்று. அதன்படி திருவெண்காடு சென்றார். முக்குளத்தில் மூழ்கி ஆலய வழிபாடு செய்துவந்தார். ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்கு சுவேதவனப் பெருமாள் என்று பெயரிட்டார்கள். அக்குழந்தையை திருவெண்ணெய்நல்லூரில் அம்மான் வளர்த்து வந்தார். குழந்தைக்கு இரண்டு வயது நிரம்பியது. தெருவில் விளையாடிக்கொண்டிருந்தது. ஆகாய வழியாகச் சென்ற பரஞ்சோதி முனிவர் இக்குழந்தைக்கு சிவஞானபோத நூலை அருளிச் செய்து அந்த நூலை உலகில் வெளியிடச் சொன்னார். அக்குழந்தை சிவஞானபோத நூலை பன்னிரண்டு சூத்திரங்களாக வெளியிட்டருளினார். பின்பு பல மாணவர்களுக்கு உபதேசித்து திருவெண்ணெய்நல்லூரில் ஐப்பசித் திங்கள் சுவாதி நன்னாளில் சிவகதி எய்தினார்.

உ

# மெய்கண்டார் துதி.

பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைகள் எல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்த அருட்கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய் மேவும்
மெய்கண்ட தேவன் மிகுசைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல் செய்வாம்.

உ

## உரை செய்த

# மாதவச் சிவஞான முனிவர் வரலாறு.

தென்பாண்டி நாட்டிலே விக்கிரமசிங்கபுரம் என்ற ஊரிலே, சைவ வேளாளர் குலத்திலே ஆநந்தக் கூத்தருக்கு மயிலம்மையார் வயிற்றிலே உதித்தவர்; முக்களாலிங்கரென்று பெயர் பெற்றவர். இளமையிலேயே கல்வி மாணவர். தன்னூருக்கு வந்த திருவாவடுதுறை ஆதீனத் துறவிகளுக்கு திருவமுது செய்துவித்தார். அவர்களுடன் திருவாவடுதுறையை அடைந்தார். ஆண்டுள்ள மகா சந்நிதானத்தினிடத்திலே தீக்கையும், சந்நியாசமும் பெற்ருர். சிவஞான யோகி யென்கிற பட்டமும் பெற்ருர். மெய்கண்ட சாத்திரங்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்தார். வடமொழி, தென்மொழிகளிலுள்ள இலக்கணம், இலக்கியம், தருக்கம் என்னும் நூல்களையும் நன்ருய்ப் பயின்ருர். அநேக நூல்களை இயற்றினுர். காஞ்சீபுரம் சென்று சிவஞான மாபாடியம் என்ற நூலைச் செய்தருளினுர். சாலிவாகன சகாப்தம் 1708 விசுவாவசு அதாவது 17—4—85 சித்திரை மாதம் 8-ம் நாள் ஞாயிற்றுக்கிழமை ஆயிலியத்தில் திருவாவடுதுறையில் சிவசாயுச்சியம் பெற்ருர்.

௨

## சிறப்புப் பாயிரம்.

மலர்தலை யுலகில் மாயிருள் துமியப்
பார்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல் ஈண்டிய
பெரும்பெயர்க் கடவுளில் கண்டுகண் இருள்தீர்ந்து
அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி
மயர்வற நந்தி முனிகணத்து அளித்த
உயர்சிவ ஞான போதம் உரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண்டு அகன்ற மெய்கண்ட தேவன்
பவம் நனி வன்பகை கடந்த
தவரடி புனைந்த தலைமையோனே.

உரைச் சுருக்கம் :- இரவில் உள்ள இருளைப் போக்கவும், அந்த இருளால் மறைக்கப்பட்ட பொருள்களை சாதாரணமாகக் காணவும், நன்றாய்க் காணவும் சூரியன் அவசியம் வேண்டும். சூரியன் இன்றி முடியாது. அதுபோல ஆன்மாவிலுள்ள ஆணவ மலமாகிய இருள் நீங்கவும், ஆணவ மலமாகிய இருளால் மறைக்கப்பட்டிருக்கிற பரமான்மாவையும் சீவான்மாவையும் சாதாரணமாகக் காணவும், நன்றாய்க் காணவும் சிவஞான போதமாகிய சூரியன் வேண்டும். சிவஞான போதமாகிய சூரியன் இல்லாமல் முடியாது.

உ

## மங்கல வாழ்த்து.

கல்லால் நிழல் மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே.

### கருத்து.

கல்லால மரத்தின்கீழ் இருந்துகொண்டு நந்தி தேவருக்கு சிவஞானபோத நூலை உபதேசித்தருளிய முதல் குருவானவர், அருள் செய்யும் பொருட்டு பொல்லாப் பிள்ளையாருடைய இரண்டு திருவடிகளையும் பெரியோர் தலைமேல் சூட்டிக்கொள்வர்.

# சிவஞான போதச் சிற்றுரைச் சுருக்கம்.

## பிரமாண இயல்

### முதல் சூத்திரத்தின் அரும்பதப் பொருள்

அவை — கூட்டம், தொகுதி; வினை — தொழில்; மூவினை — முத்தொழில், அவை பிறத்தல், இருத்தல், இறத்தலாம்; தோற்றிய—உண்டாக்கப்பட்ட; திதி—உள் பொருள்; ஒடுங்கி—சங்காரக் கடவுள்; மலம்—ஆணவ மலம் அதாவது உயிரை ஒட்டிக்கொண்டிருக்கிற அழுக்கு (அறியாமை); உளதாம்—உள்ளதாம்; உள்பொருள்—எப்போதும் இருக்கிற பொருள்; அந்தம்—முடிவு; ஆதி—முதல்; என்மனார்—என்று சொல்வார்; பதி—கடவுள்; சர்வம்—எல்லாம்; சங்காரம்—அழித்தல்; காரணன்—செய்பவன்; காரியம்—ஆக்கப்பட்டது; கன்மமலம்—நல்வினை, தீவினை; நல்வினை—புண்ணியம்; தீவினை—பாவம்; இல்பொருள் — ஒரு காலத்திலும் இல்லாத பொருள்.

### முதல் சூத்திரம்.

அவன் அவள் அது எனும் அவை மூவினைமையின்
தோற்றிய திதியே ஒடுங்கி மலத்து உளதாம்
அந்தம் ஆதி என்மனார் புலவர்.

#### கருத்து.

பதி உண்டு என்பது; அதாவது இந்த உலகம் சர்வ சங்கார காரணனாகிய ஒருவனையே முதலாக உடையது என்பதாம்.

## முதல் சூத்திரத்தின் சுருக்கம்.

இந்த உலகம் அவன் அவள் அது என்கிற மூன்று கூட்டமாக இருக்கிறது. அந்த மூன்று கூட்டங்களும் பிறக்கும், இருக்கும், இறக்கும். இந்த பிறத்தல், இருத்தல், இறத்தலாகிய மூன்று தொழில்களையும் இந்த உலகம் தானே செய்துகொள்ளாது. அதனால் இந்த உலகம் பிறக்கும்படிக்கும், இருக்கும்படிக்கும், இறக்கும்படிக்கும் ஒருவனாலே செய்யப்பட்ட பொருளாம். அந்த பிறத்தல், இருத்தல், இறத்தல்களைச் செய்தவன் சர்வ சங்கார மூர்த்தியேயாம். இந்த உலகம் அழியும்போது அந்த சர்வ சங்கார மூர்த்தியிடமே ஒடுங்கும். உண்டாகும்போதும் அந்த சர்வ சங்கார மூர்த்தியிடம் இருந்தே உண்டாகும். கன்ம மலம் பக்குவம் அடைவதற்காக ஒடுங்கும். ஆணவ மலம் பக்குவப்படுவதற்காக மறுபடியும் உண்டாகும். பக்குவப்படுகிற வரையில் உலகம் ஒடுங்குகிறதும் உண்டாகிறதுமாகவே இருக்கும். இந்த உலகம் உள்பொருளே; இல்பொருளல்ல. உள்பொருள் என்றால் எப்போதும் உண்டாகிறதும், அழிகிறதுமாகவே இருக்கிற பொருள். இல்பொருள் என்றால் ஒரு காலத்திலும் இல்லாத பொருள். முயலுக்கு ஒரு காலத்திலும் கொம்பு இல்லை, ஆமைக்கும் ஒரு காலத்திலும் மயிர் இல்லை. ஆதலால் முயல் கொம்பும், ஆமை மயிரும் இல்பொருளாம்.

## முதல் அதிகரணத்தின் அரும்பதப் பொருள்.

அதிகரணம்—பிரிக்கும் இடம்; பிரபஞ்சம்—உலகம்; திதி — இருத்தல்; நித்தம் — அழியாமல் இருப்பது; உதாரணம்—மாதிரி; ஈண்டு—இவ்விடம்; உளதாய்—உள்பொருளாகி; மேற்கோள் — துணிந்து சொல்லும் பொருள்; ஆய்ந்து — யோசித்து; நாசம் — இறத்தல்; ஏது—காரணம்; ஆண்டு—அவ்விடம்; பெற்றிமை—சாதி; இற—அழிய; சுட்டப்பட்ட—இது குடம், இது

துணி என்று காட்ட கண்ணுல் அறியப்பட்ட; உடைத்து—உடையது; ஈறு—அழிவு.

## முதல் அதிகரணம்

மேற்கோள் :— ஈண்டு உளதாய் ஒருவன் ஒருத்தி ஒன்று சுட்டப்பட்ட பிரபஞ்சம் உற்பத்தி, திதி நாசம் உடைத்து என்பதாம்.

மேற்கோளின் உரை :— இந்த உலகம் உள்பொருளாய் உள்ளது. இது குடம், இது துணி என்று சுட்டப்பட்ட பொருளாய் உள்ளது. பிறப்பு, இருப்பு, இறப்பை உடையது. அதனுல் உலகத்தை பிறர் நிதப்பொருள் என்பது பொருந்தாது.

ஏது :— தோற்றமும் ஈறும் உள்ளதன்பாலே கிடத்தலின்.

ஏதுவின் உரை :— பிறக்கிறதும், இருக்கிறதும் கண்ணுல் காணப்பட்ட பொருளுக்கே உண்டு. காணப்படாத பொருள்களுக்கு இல்லை.

## உதாரண வெண்பா

பூதாதி ஈறும் முதலும் துணையாகப்
பேதாய் திதியாகும் பெற்றிமையின்—ஓதாரோ
ஒன்றுஒன்றில் தோன்றி உளதாய் இறக்கண்டும்
அன்றுஎன்றும் உண்டு என்ன ஆய்ந்து.

உரைச் சுருக்கம் :— மண், நீர், நெருப்பு, காற்று என்கிற நான்கு பூதங்களும் உலகத்துக்கு முதல் காரணம் என்று ஒருவர் சொல்லுகிருர். அது பொருந்தாது. அந்த பூதங்களில் இருந்தே இந்த உலகம் உண்டாகிறது என்று அவர் சொல்லுகிருர். அதுவும் பொருந்தாது. ஏன் எனின், நிலையாக காணப்படும் இந்த உலகத்துக்கு உற்பத்தியும் நாசமும் உண்டு. உலகத்துக்கு மாயையே முதல் கார

ணம் என்பது ஒரு காரியஞ் செய்வதற்கு வேண்டிய அவசியமான முன்னே உள்ள பொருள். காரியம் என்பது செய்ய வேண்டுமானல் மூன்று காரணம் வேண்டும். அவை முதற்காரணம், துணைக்காரணம், நிமித்த காரணங்களாம். முதற்காரணம் என்பது காரியத்தோடு சேர்ந்து இருக்கும் பொருள். துணைக்காரணம் என்பது காரியத்தைச் செய்வதற்கு வேண்டிய ஆயுதங்கள். அந்த ஆயுதங்கள் காரியம் ஆனவுடன் விலகிவிடும். காரியத்தோடு சேர்ந்திருக்காது. மூன்ருவது நிமித்த காரணம் என்பது காரியத்தைச் செய்து முடித்து நீங்கி விடுவான். அவன் காரியத்தோடு சேர்ந்திருக்க மாட்டான்.

மாதிரி :— சங்கிலி செய்ய வேண்டுமென்ருல் முதல் காரணமும் வேண்டும், துணைக்காரணமும் வேண்டும், நிமித்த காரணமும் வேண்டும். ஒரு குடம் செய்ய வேண்டுமானல் முதல் காரணமும் வேண்டும், துணைக்காரணமும் வேண்டும், நிமித்த காரணமும் வேண்டும். உலகத்தை உண்டாக்க வேண்டுமென்ருல் முதல் காரணமும் வேண்டும், துணைக்காரணமும் வேண்டும், நிமித்த காரணமும் வேண்டும். பொன் சங்கிலி செய்ய வேண்டுமானல் பொன் முதல் காரணம். இந்த பொன் சங்கிலியோடு சேர்ந்தே இருக்கும். குறடு, சர்மணம், நெருப்புச்சட்டி, ஊதுகுழல், குகை, சுத்தி முதலியவை துணைக்காரணங்கள். இவை சங்கிலி செய்கிற வரையில் கூடவே இருந்து சங்கிலி செய்தவுடன் விலகிவிடும். இவை சங்கிலியோடு சேர்ந்திருக்கமாட்டா. தட்டான் நிமித்த காரணம். சங்கிலி செய்துவிட்டு நீங்கி விடுவான். தட்டான் சங்கிலியோடு ஒட்டிக்கொண்டிருக்க மாட்டான். இன்னும் மண்குடம் செய்ய வேண்டுமானல் மண் முதல் காரணம். காரியமாகியது குடம். காரியமாகிய குடத்தோடு மண் சேர்ந்தே இருக்கும். சக்கரம், கோல் முதலானவை துணைக்காரணங்கள். இந்த சக்கரமும், கோலும் குடம் செய்கிற

வரையில் கூடவே இருக்கும். குடம் செய்தவுடன் விலகி விடும். குடத்துடன் சேர்ந்திருக்க மாட்டா. குயவன் நிமித்த காரணம். குடம் செய்துவிட்டு விலகி விடுவான். குடத்துடன் கூடி இருக்க மாட்டான். அவைபோல, இந்த உலகம் காரியம். இந்த காரியமாகிய உலகத்துக்கு மாயை முதல் காரணம். இந்த மாயை காரியமாகிய உலகத்தோடு கூடியே இருக்கும். துணைக்காரணம், இறைவனுடைய சக்தியும் துணைக்காரணம், உயிர்கள் செய்த நல்வினை, தீவினைகளும் துணைக்காரணம். இந்த துணைக்காரணங்கள் காரியமாகிய உலகத்தோடு கூடி இருக்க மாட்டா. இறைவன் நிமித்த காரணம். நிமித்த காரணமாகிய இறைவனும், காரியத்தோடு காணும்படி கூடி இருக்க மாட்டான். இந்த உலகம் முழுதும் ஒரு காலத்தில் அழியும். எப்படி என்றால் ஒரு சாதியாயுள்ள நெற்பயிரும், ஒரே சாதியாயுள்ள கம்புப் பயிரும் ஒரே காலத்தில் உற்பத்தியாகும், ஒரே காலத்தில் நிலைத்திருக்கும், ஒரே காலத்தில் அழியும் என்பதை நாம் பார்த்திருக்கிறோம். அது போலவே உலகமும் ஒரு காலத்தில் உற்பத்தியாகும், ஒரு காலத்தில் இருக்கும், ஒரு காலத்தில் அழியும் என்பது உண்மை. ஒன்று பிறக்கும், அப்போது இன்னொன்று இருக்கும், இன்னொன்று இறக்கும் என்று பிறர் சொல்வது பொருந்தாது.

## இரண்டாம் அதிகரணம்

### அரும்பதப் பொருள்

செய்வோன் — செய்பவன்; செய்வினை — தொழில்; உள்ளது—உள்பொருள்; சிருட்டி கர்த்தா—உண்டாக்குகிற கடவுளாகிய பிரமன்; திதி—காக்கும் கடவுள், ஆறு—ஒடுங்கின விதமாக; வித்து—விதை; மூலம்—கிழங்கு; தாரகம்—ஆதாரம்; அத்தன்—கடவுள்; நோக்காது நோக்கி—பார்க்காமல் பார்த்து; நொடிக்கு—அழிக்காமல்

அழித்து; காலம்—காலதத்துவம்; தாக்காது—மோதாமல்; திதி கர்த்தா—விஷ்ணு; இலயித்து—ஒடுங்கினது; இலயித்தன்னில—ஒடுங்கின விஷ்ணு இடத்தில்; அவை—இந்த இடத்தில் மாத்திரம் வித்தியாதத்துவம் ஏழும், சிவதத்துவம் ஐந்தும்; தாள்—சத்தி; வித்தகம்—விசித்திரம்; வேட்டுவன்—செங்குளவி; சங்கல்பம்—எண்ணம்; உருவம்—வடிவம்; உளத்தில்—எண்ணத்தால்; கட்டு—வேறுபாடு; நனவு—நினைவுடன் இருக்கும் காலம்; இற்று—இந்த குணத்தை உடையது.

## இரண்டாம் அதிகரணம்

இந்த இரண்டாம் அதிகரணம் வேறே மூன்று அதிகரணங்களை தனக்குள் அடக்கிக்கொண்டு ஒரு அதிகரணமாக இருக்கிறது. அப்படி அடங்கிய அந்த மூன்றில் முதலாவது அதிகரணம் இனி உலகம் உள்ளது என்பதாம். அந்த மூன்றில் இரண்டாவது அதிகரணம் இனி உலகம் செய்வோனை உடைத்து என்பதாம். அந்த மூன்றில் மூன்றுவது அதிகரணம் இனி ஒடுங்கின சங்காரத்தின் அல்லது உற்பத்தியில்லை என்பதாம். இனி இரண்டாவது அதிகரணத்தில் அடங்கிய மூன்று அதிகரணங்களுள் முதல் அதிகரணம்.

**மேற்கோள் :— இனி உலகம் உள்ளது என்றது.**

**மேற்கோளின் உரை :—** உலகம் உள் பொருளாம். இல் பொருளல்ல.

**ஏது :— இல்லதற்குத் தோற்றம் இன்மையின்.**

**ஏதுவின் உரை :—** முயற்கோடு முதலிய இல்பொருளுக்கு எக்காலத்திலும் உற்பத்தி இல்லை. இந்த உலகம் உற்பத்தி காணப்படுதலால் உள்பொருளேயாம்.

இனி இரண்டாவது அதிகரணத்தில் அடங்கிய மூன்று அதிகரணங்களில் இரண்டாவது அதிகரணம்.

மேற்கோள் :— இனி உலகம் செய்வோனை உடைத்து.

மேற்கோளின் உரை :— உலகம் தானே உண்டாகாது. அதனால் ஒரு செய்பவனை உடையது.

ஏது :— உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை இன்மையின்.

ஏதுவின் உரை :— குடத்துக்கு முதல் காரணம் மண். முதல் காரணமாகிய மண்ணிலிருந்து குடம் உண்டாகும். உண்டானாலும் அந்தக் குடத்தைச் செய்ய நிமித்த காரணனாகிய குயவன் வேண்டும். குயவன் இல்லாமல் குடம் உண்டாகாது. அதுபோல உலகத்துக்கு முதல் காரணம் மாயை. மாயையிலிருந்து உலகம் உண்டாகும். உண்டானாலும் அந்த உலகத்தை தொழில் படுத்த நிமித்த காரணனாகிய முதல்வன் வேண்டும். முதல்வன் இல்லாமல் உலகம் உண்டாகாது. அதனால் உலகம் செய்வோனை இன்றிச் செய்வினை இன்மையின் என்று சொல்லப் பெற்றது.

இனி இரண்டாவது அதிகரணத்தில் அடங்கிய மூன்று அதிகரணங்களின் மூன்றாவது அதிகரணம்.

மேற்கோள் :— இனி ஒடுங்கின சங்காரத்தின் அல்லது உற்பத்தியில்லை.

மேற்கோளின் உரை :— உலகம் சிருட்டி கர்த்தாவாகிய பிரமாவினிடத்திலிருந்தும் உற்பத்தி ஆகாது. காத்தல் கடவுளாகிய விஷ்ணுவினிடமிருந்தும் இந்த உலகம் உண்டாகாது. ஏன் எனின், இந்த பிரமனும், விஷ்ணு

வும் ஒடுங்கும் இடம் சர்வ சங்கார மூர்த்தியிடமேயாம். ஆத லால் உலகம் உண்டாகும்போது பிரமன், விஷ்ணு முதலிய எல்லாம் ஒடுங்கின இடமாகிய சர்வ சங்கார மூர்த்தியிடம் இருந்தே உண்டாகும்.

ஏது :— ஆண்டு ஒடுங்குதலின்.

ஏதுவின் உரை :— மண் குடம் உண்டாக வேண்டு மானல் மண்ணிலிருந்தே மண் குடம் உண்டாகும். ஏன் எனில் மண் குடம் உடைந்தபோது அந்த மண்ணிடமே ஒடுங்கினபடியால். அதுபோல, உலகம் உண்டாக வேண்டு மானல் சர்வ சங்கார மூர்த்தியிடமிருந்தே உண்டாகும். ஏன் எனில் உலகம் ஒடுங்கும்போது அந்த சங்கார மூர்த்தி யிடமே ஒடுங்கினபடியால்.

இனி இரண்டாவது அதிகரணத்திலுள்ள முதலதி கரணத்தில் சொன்ன ஏதுவாகிய இல்லதற்கு தோற்றம் இன்மையின் என்றதற்கு

## உதாரண வெண்பா

இலயித்த தன்னில் இலயித்தாம் மலத்தால்
இலயித்த ஆறு உளதா வேண்டும்.

உரைச் சுருக்கம் :— உலகம் உள்பொருளேயாம். இல்பொருள் அல்ல. உள்பொருளாயிருந்தாலும் சர்வ சங்கார காலத்தில் சர்வ சங்கார மூர்த்தியிடம் ஒடுங்கும். அப்படி ஒடுங்கிய உலகம் படைப்புக் காலத்திலே அந்த சர்வ சங்கார மூர்த்தியிடமிருந்தே உண்டாகும். ஏன் ஒடுங் கும், ஏன் உண்டாகும் என்ருல் கன்ம மலம் பக்குவப்படுவ தற்காக உலகம் ஒடுங்கும். ஆணவ மலம் பக்குவப்படுவ தற்காக மறுபடியும் உலகம் உண்டாகும்.

## இலயித்தது

அத்திதியில் என்னின் அழியாது அவை அழிவது
அத்திதியும் ஆதியுமாம் அங்கு.

உரைச் சுருக்கம் :— திதி கர்த்தாவினிடத்தில் உலகம் ஒடுங்கும் என்று பிறர் சொல்வது பொருந்தாது. ஏனெனில் திதி கர்த்தாவாகிய விஷ்ணு இருக்குமிடம், தத்துவம் முப்பத்தாறில் இருபத்து நான்காந் தத்துவமாகிய பிரகிருதி தத்துவமேயாம். ஆதலால் இருபத்து நான்கு தத்துவங்கள் ஒடுங்குமே அல்லாமல் இருபத்து நான்குக்கு மேற்பட்ட பன்னிரண்டு தத்துவங்கள் ஒடுங்கமாட்டா. அந்த பன்னிரண்டு தத்துவங்களோடு கூட விஷ்ணுவும், பிரமனும் ஒடுங்கும் இடம் சர்வ சங்கார மூர்த்தியிடமேயாம். ஆதலால், விஷ்ணு இடத்தில் உலகம் முழுவதும் ஒடுங்காது. இனி இரண்டாவது அதிகரணத்தில் கூறிய உள்ளதற்குச் செய்வோரின்றிச் செய்வினை இன்மையின் என்ற ஏதுவுக்கு

## உதாரண வெண்பா.

வித்து உண்டா(ம்) மூலம் முளைத்தவா(று) தாரகமாம்
அத்தன்தாள் நிற்றல் அவர் வினையால்—வித்தகமாம்
வேட்டுவனும் அப்புழுப்போல் வேண்டுருவைத் தான் [கொடுத்துக்
கூட்டானே மண்போல் குளிர்ந்து.

உரைச் சுருக்கம் :- விதைக்கு ஒப்பானது மாயை. நிலத்துக்கு ஒப்பானது இறைவனுடைய சக்தி. நீருக்கு ஒப்பானது சத்தியினுடைய சங்கற்பமாகிய நினைப்பு. முளைப்பதற்கு ஒப்பானது உலகம் காரியப்படுதல். விதைக்கு ஆதாரம் நிலம். நிலம் நீரால் குளிரவேண்டும். நிலம் நீரால் குளிர்ந்தால், அந்த குளிர்ந்த நிலத்திலே கிடக்கிற விதை

யிலிருந்து முளை முளைக்கும். விதைக்கு ஆதாரம் நிலம் போல, மாயைக்கு ஆதாரம் இறைவனுடைய சத்தியாம். நிலம் நீரால் குளிர்வது போல, இறைவனுடைய சத்தியின் சங்கற்பமாகிய நினைப்பு உண்டானால், அந்த சத்தியின் எண்ணத்துக்குத் தக்கபடிக்கு, உயிர்கள் அவர் அவர் செய்த வினைக்கு தகுந்தவாறு, அந்தந்த முளை போன்ற காரியங்களை, தவறாமல் விதை போன்ற மாயை, தோற்று விக்கும். நிலமும் நீரும் இல்லாவிட்டால் விதையிலிருந்து முளை முளைக்காது. அது போல சத்தியும், சத்தியின் சங்கற்பமாகிய எண்ணமும் இல்லாவிட்டால், மாயை ஒரு காரியத்தையுஞ் செய்யாது. எப்படி என்றால், செங்குளவி யைப் போல ஆகவேண்டுமென்று சில பச்சைப் புழுக்கள் விரும்பும். அப்படி விரும்பிய புழுக்களுக்கு செங்குளவி தன்னுடைய உருவத்தைக் கொடுக்கும். அதுபோல இறை வன் உயிர்கள் விரும்பிச் செய்த நல்வினை, தீவினைகளுக் குத் தக்கபடி ஒவ்வொரு உருவத்தைக் கொடுப்பான். தக்க பயனையும் கூட்டுவான்.

### உதாரண வெண்பா.

நோக்காது நோக்கி நொடித்தன்றே காலத்தில்
தாக்காது நின்று உளத்தில் கண்டு இறைவன்— [ஆக்காதே
கண்ட நனவு உணர்வில் கண்ட கனவு உணரக்
கண்டவனில் இற்று இன்றும் கட்டு.

உரைச் சுருக்கம்:- பணம் கீழே கிடந்து எடுக்கக் கனவு கண்டவன், நல்ல நினைவு வந்தபோது, அந்த பணத் தில் கட்டுப்படவும் மாட்டான், வருந்தவு மாட்டான். அது போலவும், ஒருவன் நன்றாகக் கற்ற பாட்டும் பொருளும் மனத்திலுண்டாகும் காலத்தில் அந்த பாட்டிலும் பொருளி லும் வருந்தமாட்டான். அதுபோலவும், தத்துவம் முப்பத் தாறில் கால தத்துவம் என்பது ஒன்று உண்டு. அந்த

கால தத்துவம் இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம், விநாடி, நாழிகை, நாள் முதலாக பலவிதமாக வேறுபடும். இன்னும் அந்த கால தத்துவம் எல்லாத் தொழிலும் செய்யும். அப்படி வேறுபட்டும், எல்லாத் தொழிலும் செய்தும், அந்த இறந்த காலம் நாள் முதலியவற்றுள், அந்த கால தத்துவம் கட்டுப்படாமல் நிற்கும். அதுபோலவும், முதல்வன் உலகத்தை கை, கால் முதலிய உறுப்புக்களால் படைக்காமல் எண்ணத்தாலேயே படைப்பான். அது போலவே கை, கால்களைக்கொண்டு காக்காமல் எண்ணத்தாலேயே காப்பாற்றுவான். அது போலவே கை, கால் முதலியவற்றால் அழிக்காமல் எண்ணத்தாலேயே அழிப்பான். அதனால் முதல்வன் படைத்தல், காத்தல், அழித்தலாகிய எவற்றிலும் கட்டுப்பட்டு எதையும் செய்யமாட்டான்.

## மூன்றும் அதிகரணம்

### அரும்பதப் பொருள்.

சுட்டு உணர்வு — இது குடம், இது துணி என்று ஒன்று ஒன்றாய் சுட்டி அறியும் அறிவு; சுதந்திரம் — சொந்தம்; உரு—கண்ணுக்குக் காணும் வடிவம், இது தூலம்; அரு—கண்ணுக்குத் தோன்றாதது, இது சூக்குமம்; நின்றவாறு—காப்பாற்றப்பட்டது போல; ஒன்றலா— உலகத்துப் பொருள்களில் ஒன்று என்று எண்ணப்படாத; ஒன்று — ஒரு பொருளாகிய முதல்வன்; உளதாகி — உண்டாக்கப்பட்டு; ஈறுதல் — சங்காரப்படுதலால்; தொழும்பு—அடிமை; பரதந்திரம்—பிறர் வசப்பட்டது.

## மூன்றும் அதிகரணம்

மேற்கோள் :— இனிச் சங்காரமே முதல்

மேற்கோளின் உரை :— சங்கார கர்த்தாவே உலகுக்கு முதற் கடவுள்.

ஏது :— சுட்டுணர்வாகிய பிரபஞ்சம் சுட்டுணர்வு இன்றி நின்ற சங்காரத்தின் வழி அல்லது சுதந்திரம் இன்றி நிற்றலால்.

ஏதுவின் உரை :— இது குடம், இது பானை என்று சுட்டி உணரப்படுவது உலகம். இது கடவுள் என்று சுட்டி கண்ணால் காணப்படாதவன் முதல்வன். அதனால் உலகம் முதல்வன் வழியே நிற்கும். உலகத்துக்கு சுதந்திரமில்லை. பரதந்திரமேயாம்.

## உதாரண வெண்பா

ஒன்றுஅலா ஒன்றால் உளதாகி நின்றவாறு
ஒன்று அலா ஒன்றில்அவை ஈறுதல்—ஒன்றலா
ஈறேமுதல் அதனில் ஈறலா ஒன்றுபல
ஆறே தொழும்பு ஆகும் அங்கு.

உரைச் சுருக்கம் :— அறிவு உள்ள உலகம் தூல மாய், உருவமாகவும் இருக்கிறது. சூக்குமமாய், அருவமா கவும் இருக்கிறது. முதல்வன் உருவமாக உள்ள இந்த உலகத்திலும் ஒருவன் அல்லன். அருவமாக உள்ள இந்த உலகத்திலும் ஒருவன் அல்லன். இப்படி உருவ மாக இல்லாதவனும், அருவமாக இல்லாதவனும் ஆகிய முதல்வனாலே இந்த அறிவு உள்ள உலகம் உண்டாக்கப் பட்டது. அம்முதல்வனாலேயே நிலைத்தும் இருக்கிறது. அம்முதல்வனாலேயே அழிக்கவும்படும். ஆதலால் அந்த முதல்வனே உலகுக்கு முதல்வன். அறிவு உள்ள உலகம் எல்லாம் அம்முதல்வனுக்கு இப்போதும் அடிமையாம். வீடு பெற்ற காலத்திலும் அடிமையாம். முதல் சூத்திரம் முடிந்தது.

## இரண்டாஞ் சூத்திரம்

### அரும்பதப் பொருள்

இருவினை—நல்வினை, தீவினை; நல்வினை—புண்ணியம்; வரவு—பிறப்பு; ஆணை—சத்தி; மேற்கோள்—

மனதில் கொண்ட கொள்கை; அன்றே—அநாதியே; அநாதி—பிறப்பும் இறப்பும் இல்லாத காலம்; தீவினை—பாவம்; போக்கு—இறப்பு; பாசம்—உலகம்; ஈண்டு—இவ்விடம்; அதிகரணம்—ஒரு பிரிவுள்ள இடம்; புரிய—செய்ய; ஏது—காரணம்; உதாரணம்—மாதிரி.

## இரண்டாஞ் சூத்திரம்

அவையே தானேஆய் இருவினையின்
போக்குவரவு புரிய ஆணையின்
நீக்கம்இன்றி நிற்கும் அன்றே.

கருத்து:— பாசம் உண்டு என்று சொல்லுகிறது. அதாவது உலகம் மறுபடியும் உண்டாகிற விதத்தைக் கூறுகிறது.

### இரண்டாஞ் சூத்திரத்தின் சுருக்கம்

முதல் சூத்திரத்தில் சொல்லப்பட்ட சங்காரக் கடவுள் எல்லா உயிர்களாகியும் இருப்பான். அந்த உயிர்களுக்கு வேறாயும் இருப்பான். அந்த உயிர்களோடு கூடியும் இருப்பான். ஏன் இப்படி மூன்று விதமாக இருப்பான் என்றால், உயிர்கள் எல்லாம் பிறக்கவும், இருக்கவும், இறக்கவும் அப்படி இருப்பான். ஏன் அந்த உயிர்கள் பிறக்கும், இருக்கும், இறக்கும் என்றால், அந்த உயிர்கள் முன் பிறவிகளில் செய்த புண்ணியத்தாலும், பாவத்தாலும் பிறக்கும், இருக்கும், இறக்கும். அந்த உயிர்கள் அப்படி பிறக்கிறதற்காகவும், இருக்கிறதற்காகவும், இறக்கிறதற்காகவும் அந்த சங்காரக் கடவுள் தன்னுடைய சத்தியோடு கூடி இருப்பான். சத்திக்கு ஆணை என்று பெயர்.

## முதல் அதிகரணம்

### அரும்பதப் பொருள்

அத்துவிதம்—அந்நியம் நாஸ்தி; அந்நியம் நாஸ்தி—வேறன்மை; அந்நியம் — வேறு; நாஸ்தி — இல்லை;

ஆயிட்டு—ஆகலான்; அன்மை—அல்லாதது; ஏகம்—ஒன்று; துவிதம் — இரண்டு; ந—இன்மை, அன்மை, மறுதலை; உள்ளம்—உயிர்; கட்டும் உறுப்பு — நரம்பு முதலியவற்றால் கட்டப்பட்ட உடம்பு; உறுப்பு—உடம்பு; பேதாபேதம் — இரண்டு பொருள் கலந்தும் கலக்காமல் இருப்பது; அக்கரம்—எழுத்து; கிரமம்—ஒழுங்கு, முறை; இருக்கு—நான்கு வேதத்தில் ஒன்று; சேதனம்—அறிவு; பண்—இசை; கரணம்—கருவி, அதாவது மெய், வாய், கண், மூக்கு, செவி முதலிய; ஏட்டி—சேர்ந்திருப்பவன்; பேதம்—வேறுபாடு; அத்துவிதம்—வேறு இன்மை; மது —சுவை; அணைத்த—சேர்ந்த; உடங்கு இயைந்து—ஒன்ருய்க் கூடி; பிரிப்பு இன்றி—நீங்காமல்; தமியேன்—அடியேன்; உளோ—உள்ளவன்; அபேதம் — இரண்டு பொருள் ஒன்ருக கலந்திருப்பது; அண்ணல்—கடவுள்; தாள்—திருவடி; மறை—வேதம்; அறையும்—சொல்லும்; உளம்—உயிர்; சோகம்பாவனை—உயிர் தன்னைச் சிவமாகப் பாவித்தல்.

## முதல் அதிகரணம்

மேற்கோள் :— ஈண்டு ஆன்மாக்கள் பலவும் முதல்வன் தானேயாய் நிற்கும் என்றது.

மேற்கோளின் உரை :— முதல்வன் உலகங்களை உற்பத்தி செய்யும்போது உயிர்களோடு உடனாய் இருந்து செய்வான்.

ஏது:— அத்துவிதம் என்ற சொல்லானே ஏகம் என்னில் ஏகம் என்று சுட்டுவது உண்மையின் அத்துவிதம் என்ற சொல்லே அந்நியம் நாஸ்தியை உணர்த்துமாயிட்டு.

ஏதுவின் உரை :— அத்துவிதம் என்ற சொல்லுக்கு ஏகம் என்று பொருள் கொள்ளக்கூடாது. அத்துவிதம்

என்ற சொல்லுக்கு கடவுளும் உயிரும் வேறல்ல என்பது பொருள். ஏகம் என்பதற்கு கடவுள் ஒருவரே என்பது பொருள். அதனால்தான், இருக்கு என்கிற வேதத்திலே அத்துவிதம் என்று ஒரு இடத்திலும், ஏகம் என்று வேறொரு இடத்திலும் சொல்லியிருக்கிறது. முதல்வன் எல்லா உயிர்களுமாயிருப்பான் என்றதற்கு

## உதாரண வெண்பா

கட்டும் உறுப்பும் கரணமும்கொண்டு உள்ளம்
இட்டது ஒருபேரழைக்க என்னென்றுங்கு—ஒட்டி
அவன் உளம் ஆகில்லான் உளம் அவனு மாட்டாது
அவன் உளமாய் அல்லனுமாம் அங்கு.

உரைச் சுருக்கம்:— ஒருவனுக்கு கணபதி என்று பெயர். வேறு ஒருவனுக்கு கந்தன் என்று பெயர். கணபதி, கந்தன் என்ற பெயர் உயிருக்கு இட்ட பெயரல்ல. உடம்புக்கு இட்ட பெயரேயாம். ஆனால் கணபதியென்று உடம்புக்கு இட்ட பெயரால் கூப்பிட்டால், அந்த உடம்பு ஏன் என்கிறதில்லை. உயிர் ஏன் என்று கேட்கிறது. உடம்புக்கு இட்ட பெயரால் அழைத்தால், உயிர் ஏன் என்றதற்குக் காரணம் என்ன என்றால், உயிரும் உடம்பும் வேற்றுமை யில்லாமல், உடலில் உயிர் ஒட்டி நிற்கிறது. அதுபோல, முதல்வன் உயிர்களில் வேறுயில்லாமல், ஒட்டி நிற்பான். அப்படி ஒட்டி நின்றாலும், உயிர் உயிரே, உடம்பு உடம்பேயாம். உயிர் உடம்பாகாது, உடம்பு உயிராகாது. ஆனாலும் உயிர் உடம்புக்கு வேறுகியும் நிற்கும், உடம்பாகியும் நிற்கும். உடம்பு உடம்பாகி நிற்கும். உயிராகி நிற்காது. அதுபோல முதல்வன் முதல்வனே. உயிர் உயிரே. முதல்வன் உயிராக மாட்டான், உயிர் முதல்வனாக மாட்டாது. ஆயினும் முதல்வன் உயிராயும் நிற்பான், உயி

ருக்கு வேருகியும் நிற்பான். உயிர் அப்படி நிற்காது. முதல்வன் உயிர்களுக்கு வேருய் தானே ஆனதற்கு

### உதாரண வெண்பா

ஒன்றுஎன்றது ஒன்றேகாண் ஒன்றேபதி பசுவாம்
ஒன்றுஎன்ற நீபாசத்தோடு உளேகாண்—ஒன்றுஇன்ருல்
அக்கரங்கள் இன்ரும் அகரஉயிர் இன்றேல்
இக்கிரமத்து என்னும் இருக்கு.

உரைச் சுருக்கம் :— இருக்கு வேதத்தில் பிரமம் ஏகம் என்றதற்குப் பொருள் பதி ஒன்றே; இரண்டில்லே என்பதாம். ஒன்று என்று சொல்லுகிற நீ பசுவாம். பதியும் அறிவுள்ள பொருள், பசுவும் அறிவுள்ள பொருள். அப்படியிருக்க இரண்டுக்கும் ஒரே பெயராயில்லாமல் முதல்வனுக்குப் பதியென்றும், உயிருக்குப் பசு என்றும் பெயர் வந்ததற்குக் காரணம் என்ன என்ருல் உயிருக்குப் பாசம் உண்டு; அதனுல் உயிருக்குப் பசு என்று பெயர். முதல்வனுக்குப் பாசம் இல்லே; அதனுல் முதல்வனுக்குப் பதியென்று பெயர். எல்லா எழுத்துக்களுக்கும் அகரம் முதலானது போலவாம். முதல்வன் அவையே தானே ஆனதற்கு

### உதாரண வெண்பா.

பண்ணேயும் ஓசையும்போலப் பழமதுவும்
எண்ணுஞ் சுவையும்போல் எங்குமாம்—அண்ணல்தான்
அத்துவிதமாதல் அருமறைகள் ஒன்று என்ஞது
அத்துவிதம் என்று அறையும் ஆங்கு.

உரைச் சுருக்கம் :— பண்ணுக்குள் இசை அடங்கியிருப்பதால் பண்ணும் இசையும் வேறல்ல; ஒன்றே. பழத்தில் சுவை அடங்கியிருப்பதால் பழமும் சுவையும்வேறல்ல; ஒன்றே. அதுபோல எங்கும் நிறைந்துள்ள முதல்வ

னுடைய திருஅருளும் உயிர்களும் ஒன்றாய் நிற்கும்; வேறல்ல. ஆதலால் வேதங்கள் ஏகம் என்னுமல் அத்து விதம் என்று சொல்லும். இனி முதல்வன் எல்லா உயிர் களாயுமிருப்பான், உயிர்களுக்கு வேறாகியும் இருப்பான், உயிர்களுக்கு உடனாயும் இருப்பான் என்பதற்கு

### உதாரண வெண்பா.

அரக்கொடு சேர்த்தி அணைத்த அக்கல்போல்
உருக்கி உடங்கு இயைந்துநின்று—பிரிப்பின்றித்
தானே உலகாம் தமியேன் உளம்புகுதல்
யானே உலகு என்பன் இன்று.

உரைச் சுருக்கம் :— அரக்கை உருக்கி அந்த அரக் கோடு கல்பொடியைச் சேர்த்தால், அணைத்த கல்பொடி அந்த அரக்கோடு ஒன்றாய்ச் சேர்ந்து நீங்காமல் நிற்கும். அதுபோல முதல்வன் உயிர்களில் ஒன்றாய்க் கூடி நீக்கம் இல்லாமல் உடனாக இருப்பான். ஆதலால் முதல்வன் தானேயாயும் இருப்பான், உலகமாகியும் இருப்பான், தானும் உலகமாகியும் இருப்பான். உயிர் அப்படி நில்லாது. பாசக் கூட்டத்திலிருந்து நீங்கி தனியாய் நின்ற பக்குவ முள்ள உயிர்களிடத்திலே முதல்வன் சோகம்பாவனையால் புகுந்து வேறுபாடு இல்லாமல் உலகமாகி நிற்பான். அப் படி நிற்றலாலே யானே உலகெல்லாம் ஆயினேன் முத்திக் காலத்திலே என்று பக்குவ ஆன்மாக்கள் சொல்லுவார் கள். அதனால் முதல்வன் எல்லாப் பொருளாகியும், வேறாகி யும், உடனாகியும் இருப்பான். உயிர் அப்படி நில்லாது. யானே உலகெல்லாம் ஆயினேன் என்று சிலர் சொல்லு வது சோகம்பாவனையினாலேயாம்.

## இரண்டாம் அதிகரணம்

### அரும்பதப் பொருள்

நகரி — பட்டணம்; பாடிக்காவலர் — ஊர்காப்பாளர்; உள்ளதே — உள்பொருளே; உள் அடைவே — உள்ள

முறையாலே; வள்ளல்—முதல்வன்; செய்—வயல்; உள்ளுதல்—அநுபவித்தல்; விளைக்கும்—தரும்; பிராரத்த வினை—இப்போது அநுபவிக்கிற வினை; ஆகாமிய வினை —இப்போது நாம் செய்கிற வினை; பிரான்—முதல்வன்; நுகராரேல்—அநுபவிக்காவிட்டால்; கமலம்—தாமரை; செயல்—தொழில்; அணையா—சேரா; வல்லி—மாயை; அலர்—விரிந்தது; வாள்—ஒளி; சஞ்சிதவினை—அநுபவிக்க பக்குவமாக இருக்கிற வினை; பசாசம் — இரும்பு; போரமல்—மாறுபடாமல்; வினைஞர்—தொழில் செய்பவர்; களிம்பு—அழுக்கு; தொன்மை—முன்னே உண்டானது; அன்று—அநாதி; சோகம்—குவிதல்.

## இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள் :—** இனி இவ் ஆன்மாக்களுக்கு இருவினை முதல்வன் ஆணையின் வரும்.

**மேற்கோளின் உரை :—** முதல்வன் உயிரோடு கலந்து உயிருக்கு வேருகியும், உயிருடன் உடனுகியும், இருக்கிற சொந்தமுள்ள உயிர்களுக்கு, உயிர்களாலே முன் பிறவியிலே சம்பாதிக்கப்பட்டு, மாயையிலே கிடக்கிற நல்வினை தீவினைகள், முதல்வனுடைய சத்தியால் உயிர்களுக்கு உண்டாகும்.

**ஏது :—** ஒரு நகரியைக் காப்பான் பாடிகாவல் இட்டாங்கு அவை அவனது ஆக்கினை ஆகலான்.

**ஏதுவின் உரை :—** பட்டணத்தைக் காக்கும் ஒரு அரசன், தன் ஊர் காக்கும் தன்னுடைய தொழிலை, தனக்குப் பற்றுதல் உள்ளவனிடம் கொடுத்து அந்த தொழிலை நடத்துவான். அதுபோல முதல்வன், மறுபடியும் உயிர்கள் பிறக்கும்படி செய்கிற தன்னுடைய கட்டளையை, அந்த உயிர்கள் செய்த புண்ணியங்களிடத்திலும், பாவங்களிடத்திலும் வைத்து நடத்துவான்.

## உதாரண வெண்பா

உள்ளதே தோற்ற உயிர் அணையும் அவ்வுடலில்
உள்ள தாம் முற்செய்வினை உள்ளடைவே
—வள்ளல் அவன்
செய்பவர் செய்திப் பயன்வினைக்கும் செய்யேபோல்
செய்வன் செயல் அணையா சென்று.

உரைச் சுருக்கம் :— இல்லது உண்டாகாது. உள்ளதே உண்டாகும். ஆதலால் உயிர்கள் முன் பிறவிகளிலே செய்த புண்ணியங்களும், பாவங்களுமே உள்ள பொருளாம். அதுவே சஞ்சித வினையாம். அந்த சஞ்சித வினையே புண்ணியத்தின் பயனாகிய இன்பத்தைத் தரும். பாவத்தின் பயனாகிய துன்பத்தையும் தரும். அதன் பின்பு அந்த இன்பத்தை அநுபவிக்கவும், துன்பத்தை அநுபவிக்கவும், உடம்பினையும் அந்த சஞ்சிதவினை தரும். அந்த உடம்பு சடமானதால் இன்பத்தையும் அநுபவிக்காது, துன்பத்தையும் அநுபவிக்காது. உயிருக்கு அறிவு உள்ளபடியால், அந்த உயிரே உடலில் சேர்ந்து இன்பத்தையும் அநுபவிக்கும், துன்பத்தையும் அநுபவிக்கும். முன் செய்த வினைகளை உயிர் அநுபவித்த பிறகும், பின் வரும் பிறவிகளிலும் அநுபவிக்கும்படிக்கும் வினை இருக்கும். எப்படி என்றால், முன்செய்த வினைகளை அநுபவிக்கும்போது ஏதாவது ஒரு வினை செய்வதால், அந்த வினையால் மறு பிறவிக்கு வினை உண்டாகும். நிலம் நன்றாய் விளைய விரும்பி உழவர்கள் எருப்போடுதல் முதலிய தொழில்களைச் செய்கிறார்கள். நன்றாய் விளைகிற பயனை நிலமே தருகிறது. எருப்போடுகிற தொழில் தருகிறதில்லை. அதுபோல உயிர்கள் செய்த புண்ணிய பாவங்களே இன்ப துன்பமாகிய பயனைத் தராது. வள்ளலாகிய முதல்வனே உயிர்களுக்குத் தருவான்.

## உதாரண வெண்பா

அவ்வினையைச் செய்வதனில் அவ்வினைஞர் தாம்
சென்று அங்கு
அவ்வினையைக் காந்த பசாசம்போல்–அவ்வினையைப்
பேராமல் ஊட்டும் பிரானில் நுகராரேல்
ஆர்தாம் அறிந்து அணைப்பார் ஆங்கு

உரைச் சுருக்கம் :— ஒருவன் காந்தக்கல்லை எடுத்து இரும்புக்கு நேராகப் பிடித்தால், அந்த காந்தக்கல் இரும்பினை இழுத்துக்கொள்ளும். நேராகப் பிடிக்காவிட்டால், காந்தம் இரும்பினை இழுக்காது. அதுபோல முதல்வன், உயிர்கள் செய்த வினையின் பயனை, மலத்தில் கட்டுப்பட்டு அறிவும் இல்லாமல், சுதந்திரமும் இல்லாமல் கிடக்கிற, அந்த அந்த உயிர்களுக்கு, மாறுபடாமல் உண்பிப்பான். அப்போது அந்த அந்த வினைகளைச் செய்த, அந்த அந்த உயிர்கள், அந்த அந்த வினைகளை, அந்த அந்த உடம்பில் சேர்ந்து அநுபவிக்கும்.

## உதாரண வெண்பா

நெல்லிற்கு உமியும் நிகழ் செம்பினில் களிம்பும்
சொல்லில் புதிது அன்று தொன்மையே—வல்லி
மல கன்மம் அன்று உளவாம் வள்ளலால் பொன்வாள்
அலர்சோகம் செய்கமலத்து ஆம்.

உரைச் சுருக்கம் :— நெல்லினிடத்திலே இருக்கிற உமி, நெல் உண்டானபோதே உண்டானதாம். நெல் உண்டாகி, சில காலங் கழித்து அந்த உமி இடையிலே வந்ததல்ல. செம்பிலே இருக்கிற களிம்பும், செம்பு உண்டானபோதே கூடவே உண்டானது. செம்பு உண்டாகி சில காலங் கழித்து அந்த களிமபு உண்டானதல்ல. அது போல மாயை என்கிற ஒரு மலமும், ஆணவம் என்கிற

ஒரு மலமும், கன்மம் என்கிற ஒரு மலமும், ஆக மூன்று மலங்களும் உயிர் என்பது எப்போது இருந்ததோ, அப் போதே உயிரினிடத்தில் இருந்ததேயாம். இடையிலே உயிருக்கு வந்தன அல்ல. இந்த மாயையும், ஆணவமும், கன்மமும் தன்னுடைய காரியங்களை முதல்வனாலேயே செய் யும். எப்படி என்றால், தாமரைப்பூ முதலிலேயே குளத்தில் இருக்கிறது. அந்த தாமரைப்பூ மலர்தலும் சூரியனாலே, குவிதலும் சூரியனாலேயேயாம். அதுபோல என்க.

## மூன்றும் அதிகரணம்

### அரும்பதப் பொருள்

நனவு—நல்ல நினைவோடு இருக்கும் காலம்; விண்—சுவர்க்க உலகம்; படர்ந்து—போய்; அத்தூடு—அந்த உடம்போடு; உள்ளதே—சூக்கும உடம்பே; கருவில்—கருப்பத்தில்; உளம்—உயிர்; உள்ளம்—சூக்கும உடம்பு; அரவு — பாம்பு; பரகாயம் — வேறு உடம்பு; பண்பு — குணம்; பரவின்—சொன்னால்; குட ஆகாயம்—குடத்தி லுள்ள வெளி; மாறி—இறந்து; கூத்தாட்டு—கூத்து; அடாது—தகாது.

## மூன்றும் அதிகரணம்

மேற்கோள்:— ஆன்மாக்கள் மாறிப் பிறந்து வரும்.

மேற்கோளின் உரை:— உயிர்கள் இறந்து பிறந்து வரும்.

ஏது:— தோற்றமும் ஈறும் உள்ளதற்கல்லது உளதாதல் இன்மையால்.

ஏதுவின் உரை:— உள்பொருளுக்கே பிறப்பும் இறப் பும் தொடர்ச்சியாக உண்டு. மற்றைப் பொருளுக்கு பிறப் பும் இல்லை, இறப்பும் இல்லை.

### உதாரண வெண்பா.

கண்ட நனவைக் கனவு உணர்வில்தான் மறந்து
விண்படர்ந்து அத்தூடு வினையினால்—கண்செவி கட்டு
உள்ளதே தோற்ற உளம் அணுவாய்ச் சென்று மனம்
தள்ள விழும் கருவில்தான்.

உரைச் சுருக்கம்:— உயிர் மீளப் பிறக்குங் காலத்தில் ஏற்படும் விதங்களை இந்த வெண்பாவால் கூறப்படுகிறது. வாய், கண், மூக்கு, செவி முதலியவைகளையுடையது இந்த தூல உடம்பு. இந்த தூல உடம்புக்குள் இருக்கிற உடம்பு சூக்கும உடம்பு. இந்த சூக்கும உடம்பு, படைப்புக் காலம் முதற்கொண்டு சங்கார காலம் வரையிலும் அழியாமல் நிலைபெற்றிருக்கும். தூல உடம்பு அடிக்கடி கெடும். சூக்கும உடம்பு கெடாமல் இருக்க தூல உடம்பு முதலில் கெடும். தூல உடம்பு கெட்டவுடனே சூக்கும உடம்பு பூதசார உடம்பாக மாறும்; மாறினபோது உயிர் அந்த பூதசார உடம்பில் பொருந்தும். பொருந்தின பிறகு அந்த பூதசார உடம்பு சுவர்க்க உலகத்துக்குப் போகும். சுவர்க்க உலகத்தில் இன்பத்தை அநுபவிக்கும். பின்பு அந்த பூதசார உடம்பு நரக உலகத்துக்குப் போகும். போகும்போது யாதனா சரீரம் எடுத்துப்போகும். போய் அந்த உயிர் அங்கே துன்பத்தை அநுபவிக்கும். பின்பு துறக்க நாட்டுக்கு போனதை உயிர் மறக்கும். துறக்க நாட்டில் அநுபவித்த இன்பத்தையும் உயிர் மறக்கும். அதுபோலவே உயிர் நரக உலகத்துக்குப் போனதையும் மறக்கும். நரக உலகத்தில் அநுபவித்த துன்பத்தையும் உயிர் மறக்கும். மறந்தபோது உயிருக்கு மனம் வேறுபடும். முன் இருந்த தூல உடம்பு இறக்குங் காலத்திலே அடுத்த பிறவியிலே உயிர் எந்த உடம்பை எடுக்கப்போகிறதோ அந்த உடம்பு எடுப்பதற்குத் தக்கபடி மனம் ஆசைப்

படும். அந்த ஆசையின்படி உயிர் சூக்கும தேகமாய், மனம் ஆசைப்பட்ட பிறப்பிலே போய் கருவில் விழும்.

## உதாரண வெண்பா

அரவுதன் தோல் உரியும் அக்கனவும் வேறு
பரகாயம் போய்வரும் அப்பண்பும் – பரவில்
குடஆகாய ஆகாயக் கூத்தாட்டாம் என்பது
அடாது உள்ளம் போமாறு அது.

உரைச் சுருக்கம் :— பாம்பு பழைய தோலை உரித்து விட்டு புதிய ஒரு தோலை போர்த்துக்கொண்டு போதல் போல, உயிர் தூல உடம்பை விட்டுப் போகும். புருடன் நனவு உடம்பை விட்டு நீங்கி கனவு உடம்பில் போதல் போல, உயிர் தூல உடம்பை விட்டுப் போகும். யோகிகள் தங்களுடைய உடம்பைவிட்டு நீங்கி, வேறு உடம்பில் போதல் போல உயிர் தூல உடம்பை விட்டுப் போகும். குடத்தில் உள்ள ஆகாயம் குடம் உடைந்தபோது பர ஆகாயத்தில் போதல் போல உயிர் சூக்கும உடம்பை விட்டுப் போகும்.

## நான்காம் அதிகரணம்

மேற்கோள்:— நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.

மேற்கோளின் உரை:— முதல்வன் தன்னுடைய ஆணையாகிய சிற்சத்தியோடு பிரியாமல் இருப்பான்.

ஏது:— அவன் ஏகம் அநேகம் இரண்டும் இன்றிச் சருவ வியாபியாய் நிற்றலால்.

ஏதுவின் உரை:— முதல்வன் தனது சத்தியோடு கூடி ஒரு பொருளாகவும் இருக்கமாட்டான். சத்திக்கு வேறாக இரண்டாகவும் முதல்வன் இருக்கமாட்டான். முதல்

வன் இந்த இரண்டுக்கும் பொதுவாய் எங்கும் நிறைந்து நிற்றலால் ஆணையில் நீக்கம் இன்றி நிற்கும் என்று மேற்கோள் சொல்லப்பட்டது.

## உதாரண வெண்பா

எங்கும் உளன் என்ற அளவை ஒன்று அன்று இரண்டு என்னில்
எங்கும் உளன் அன்று எவற்று எவனும் — அங்கண்
அவை அவன் அன்று இல்லைப் பொன் ஒளிபோல் ஈசன்
அவை உடைமை ஆளாம் நாம் அங்கு.

**உரைச் சுருக்கம் :—** முதல்வன் எல்லாப் பொருள்களுமாய் இருப்பான் என்றதனாலே முதல்வன் ஒருவனே என்பது பொருந்தாது. ஏன் என்னில், ஒரு பொருள் ஒரு இடத்தில் மாத்திரம் இருக்குமே தவிர எங்கும் இருக்காது. முதல்வன் இரண்டு பொருள்களாய் இருப்பன் என்றால், இரண்டு பொருள்களாய் இருக்கிற முதல்வன் எல்லாப் பொருள்களுமாய் இருத்தல் முடியாது. முதல்வன் எங்கும் இருப்பவன் அல்லன் என்றால், எந்த இடங்களிலும் உள்ள எல்லாப் பொருள்களும் முதல்வனை இல்லாமல் இருக்காது என்பது பொருந்தாது. ஆதலால் முதல்வன் ஒரு பொருளே ஆகாமலும், இரண்டு பொருளும் ஆகாமலும் இரண்டுக்கும் பொதுவாய் சூரியனும் அதன் ஒளியும் போல சிவமும் சத்தியுமாய்க் கூடி இருக்கும். முதல்வன் சத்தியோடு கூடி இருப்பதுபோலவே பசுவும் தன் சத்தியோடு கூடியிருக்கும். ஆனாலும் பசு என்பது பதிக்கு சமமாகாது. பாசங்களும் தன்னுடைய சத்தியோடு கூடியிருக்கும். ஆனாலும், பாசம் முதல்வனுக்கு சமமாகாது. இப்படி பதி தன் சத்தியோடு கூடியும், பசு தன் சத்தியோடு கூடியும், பாசம் தன் சத்தியோடு கூடியும் இருந்தா

லும், மூன்றும் சமமல்ல. பதி முதல்வனே. பசு முதல்வனுக்கு அடிமையே. பாசம் முதல்வனுடைய உடைமையேயாம். இரண்டாஞ் சூத்திரம் முடிந்தது.

## மூன்றுஞ் சூத்திரம்

### அரும்பதப் பொருள்.

உளது—உள்ளது; இலது—இல்லது; ஐம்புலன்—மெய், வாய், கண், மூக்கு, செவி; ஒடுக்கம் — சூக்கும உடம்பு; சூக்குமம்—சிறியது; இந்திரியம்—பொறி; ஆன்மப் பிரகாசம்—ஆன்மா உண்டு என்பது; கண்படில்—தூங்கினால்; உண்டி — உணவு; வினை — தொழில்; மாயா இயந்திரம் — மாயையினால் செய்யப்பட்ட உடம்பு; தனு—உடம்பு; பிராணன்—பிராண வாயு; இயந்திரம்—பொறி அல்லது கருவி.

## மூன்றுஞ் சூத்திரம்

**உளது இலது என்றலின் எனது உடல் என்றலின்**
**ஐம்புலன் ஒடுக்கம் அறிதலின் கண்படில்**
**உண்டி வினை இன்மையின் உணர்த்த உணர்தலின்**
**மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.**

கருத்து :— உயிர் உண்டு என்பது.

### மூன்றுஞ் சூத்திரத்தின் சுருக்கம்

சூனிய ஆன்மவாதி என்பவன் உயிர் இல்லை என்றான். தேக ஆன்மவாதி உடலே உயிர் என்றான். இந்திரிய ஆன்மவாதி இந்திரியங்களே உயிர் என்றான். சூக்கும தேக ஆன்மவாதி சூக்கும தேகமே உயிர் என்றான். பிராண ஆன்மவாதி பிராண வாயுவே உயிர் என்றான். விஞ்ஞான ஆன்மவாதி கடவுளே உயிர் என்றான். சமூக ஆன்மவாதி உடலும், ஐம்புலனும், சூக்கும உடம்பும்,

பிராண வாயுவும், கடவுளும் இவை ஐந்தும் கூடியதே உயிர் என்றான். இந்த ஏழு பேர் சொன்னதும் உயிரல்ல. இவைகளுக்கு வேறாக உயிர் இருக்கிறது என்பதைக் கீழ் வரும் ஏழு அதிகரணத்திலும் காண்க.

## முதல் அதிகரணம்

### அரும்பதப் பொருள்

அன்று—அல்ல; தர்ப்பணம்—கண்ணாடி; தற்பரம்—சிவம்; அனைத்தும்—எல்லாம்; சார்மாயை—சேரப் பட்ட மாயை; பொறி—மெய், வாய், கண், மூக்கு, செவி; விடயம்—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்.

நினைவுக் குறிப்பு :— சிவஞானபோதத்தில் 12 சூத்திரங்கள் இருக்கின்றன. அவற்றில் மூன்றாஞ் சூத்திரம் தவிர மற்ற பதினொரு சூத்திரங்களுக்கும், மேற்கோள் வேறாகவும், ஏது வேறாகவும், கூறியிருக்கிறது. மூன்றாஞ் சூத்திரத்துக்கு மாத்திரம், முதல் ஆறு அதிகரணங்களுக்கு மேற்கோளும் ஏதுவும் சேர்த்து எழுதப்பட்டிருக்கிறது. அப்படி எழுதியிருந்தாலும் ஏதுவே ஏதுவாகக் கொள்க. மேற்கோளையும் ஏதுவாகக் கொள்க.

## முதல் அதிகரணம்

**மேற்கோளும் ஏதுவும் :— ஈண்டு இலது என்றலின் ஆன்மா உளது.**

**ஆன்மா உளது என்றது மேற்கோள்; ஈண்டு இலது என்பது ஏது.**

உரைச் சுருக்கம் :— சூனிய ஆன்மவாதி உடலும் உயிரல்ல, ஐம்பொறிகளும் உயிரல்ல, ஐந்து விடயங்களும் உயிரல்ல என்று ஒன்று ஒன்றையும் கழித்துக்கொண்டு வந்து உயிர் என்பது சூனியம் என்றான். அப்படி உயிர் சூனியம் என்றது பொருந்தாது. ஒன்றை அறிவதுதான்

உயிர். உயிருக்குத்தான் அறிவு உண்டு. உடல் உயிரல்ல, பொறி உயிரல்ல, புலன் உயிரல்ல என்று அறிந்து சொன்னது எதுவோ அதுதான் உயிர்.

### உதாரண வெண்பா.

அன்று அன்று என நின்று அனைத்தும் விட்டு அஞ்சு எழுத்தாய்
நின்ற ஒன்று உளது அதுவே நீ அனைத்தும்—நின்று இன்று
தர்ப்பணம்போல் காட்டலால் சார்மாயை நீயல்லை
தற்பரமும் அல்லை தனி.

உரைச் சுருக்கம் :— உடலில் உயிர் பொருந்தியிருந்து உடல் உயிரல்ல என்று அறிந்துவந்த அறிவே உயிர். மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய பொறிகளில் பொருந்தியிருந்து, பொறிகள் உயிரல்ல என்று அறிந்து வந்த அறிவே உயிர். சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் ஆகிய விடய முதலியவற்றில் பொருந்தியிருந்து விடயங்களை உயிரல்ல என்று அறிந்துவந்த அறிவே உயிர். அந்த உயிர்தான் நீ. உயிருக்கு அறிவை விளக்கிநிற்பது கண்ணாடி போன்ற மாயை. மாயையால் விளங்கி அறியும் உயிர் வேறு, மாயை வேறு. மாயையைக் கடந்து நிற்பது சிவம். ஆகலான், உயிர் வேறு, மாயை வேறு, சிவம் வேறு. உயிர் சூக்குும பஞ்சாக்கர வடிவாயுள்ளது. சூக்கும பஞ்சாக்கரம், அ. உ. ம. நாதம், விந்து என்பவைகளாம்.

## இரண்டாம் அதிகரணம்

### அரும்பதப் பொருள்

யாக்கை—உடம்பு; நிற்றி—நிற்பாய்; உன்னில்—நினைத்தால்; மாட்டின்—பொருள்போல;

## இரண்டாம் அதிகரணம்

மேற்கோளும் ஏதுவும்:— இனி எனதுடல் என்றலின் ஆன்மா உளது என்றது.

இதில் ஆன்மா உளது என்றது மேற்கோள். இனி எனதுடல் என்றலின் என்பது ஏது.

உரைச் சுருக்கம் :— தேகான்மவாதி நான் பருத்தேன், நான் இளைத்தேன் என்று உடம்பையே நான் என்று சொல்லுவதால் உடலே உயிர் என்று சொன்னான். அப்படி சொன்னது பொருந்தாது. நான் பருத்தேன், நான் இளைத்தேன் என்பது போல, நான் கை, நான் உடம்பு, நான் கால் என்று யாராவது சொல்லுவார்களோ? சொல்லமாட்டார்கள். பருப்பதும், இளைப்பதும் உடலின் குணம். உடலும் உயிரும் வேற்றுமையில்லாமல் ஒற்றுமைப்பட்டு கலந்து இருப்பதால் பருக்கும் குணத்தையும், இளைக்கும் குணத்தையும் உயிருடன் சேர்த்து நான் பருத்தேன், நான் இளைத்தேன் என்பது உபசாரமேயாம். நான் என்றது உயிர். பருக்கிறதும், இளைக்கிறதும் உடலின் குணம். உயிர் பருக்காது, இளைக்காது. உயிர் குணி. குணி என்றால் குணத்தை உடையது.

### உதாரண வெண்பா

எனது என்ற மாட்டின் எனது அலாது என்றது
உனது அலாது உன் கைகால் யாக்கை—எனது என்றும்
என் அறிவது என்றும் உரைத்து நீ நிற்றிகாண்
உன்னில் அவை வேறாம் உணர்.

உரைச் சுருக்கம் :— மாடு வேறு, வீடுவேறு, நாம் வேறு. இப்படியிருக்க வேறாயிருக்கிற மாட்டை எனது மாடு என்று சொல்லுகிறோம். நான் மாடு என்று சொல்லுகிறதில்லை. வேறாயிருக்கிற வீட்டையும் எனது வீடு

என்று சொல்லுகிறோம். நான் வீடு என்று சொல்லுகிற தில்லை. அதுபோல கையும் வேறு, காலும் வேறு, உடலும் வேறு, நானும் வேறு. இப்படி வேறுயிருக்கிற கையை எனது கை என்று சொல்லுகிறோம். நான் கையென்று சொல்லுகிறதில்லை. வேறுயிருக்கிற காலையும் எனது கால் என்று சொல்லுகிறோம். நான் கால் என்று சொல்லுகிற தில்லை. வேறுயிருக்கிற உடலையும் எனது உடல் என்று சொல்லுகிறோம். நான் உடல் என்று சொல்லுகிறதில்லை. எண்ணிப் பார்த்தால், நான் வேறு, நம் உடல் வேறு தான். நான் என்பது உயிர்; உடல் வேறு. உடல் உயிராகாது.

## மூன்றும் அதிகரணம்

### அரும்பதப் பொருள்

ஐம்புலன்—சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் அல்லது சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம்; ஐம்பொறி—மெய், வாய், கண், மூக்கு, செவி; உடல் மன்னி—உடலில் நிலை பெற்று; சூக்கும பஞ்சாக்கரம் — அ. உ. ம. விந்து, நாதம்; அன்றும்—வேறுபடும்; ஆய்—யோசிக்கின்ற; உன்னல்—அறிதல்; ஓர்—எண்ணிப்பார்.

## மூன்றும் அதிகரணம்

**மேற்கோளும் ஏதுவும் :— இனி ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது என்றது.**

**இதில் ஆன்மா உளது என்றது மேற்கோள். இனி ஐம்புலன் அறிதலின் என்றது ஏது.**

**உரை :—** ஐம்புலன்களாகிய சத்தம், பரிசம், ரூபம், ரசம், கந்தம் என்கிற சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்தையும், மெய், வாய், கண், மூக்கு, செவிகள் அறிகிறபடியால் அறிகிற ஐம்பொறிகளே உயிர்

என்று இந்திரிய ஆன்மவாதி சொல்வது பொருந்தாது. மெய், வாய், கண், மூக்கு, செவி என்கிற ஐம்பொறிகளையும் அறிவது ஒன்று உண்டு. அதுதான் உயிர்.

### உதாரண வெண்பா.

ஒன்று அறிந்தது ஒன்று அறியாதாகி உடன்மன்னி
அன்றும் புலனாய் அவ் ஐந்தெழுத்தை—ஒன்று அறிதல்
உள்ளதேயாகில் அது நீ தனித்தனி கண்டு
உள்ளல் அவை ஒன்று அல்லை ஓர்.

உரைச் சுருக்கம்:— சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம், இந்த ஐந்தில் சத்தத்தை மாத்திரம் காது அறியும். மற்ற பரிசம், உருவம், இரசம், கந்தம் இந்த நான்கையும் காது அறியாது. இந்த ஐந்தில் வாசனையை மாத்திரம் மூக்கு அறியும். மற்ற சத்தம், பரிசம், ரூபம், ரசம் என்கிற நான்கையும் மூக்கு அறியாது. இந்த ஐந்தில் உருவத்தை மாத்திரம் கண் அறியும். மற்ற சத்தம், பரிசம் ரசம். கந்தம் இந்த நான்கையும் கண் அறியாது. இந்த ஐந்தில் இரசத்தை மாத்திரம் வாய் அறியும். மற்ற சத்தம் பரிசம், ரூபம், கந்தம் என்கிற இந்த நான்கையும் வாய் அறியாது. இந்த ஐந்தில் பரிசத்தை மாத்திரம் மெய் அறியும். மற்ற சத்தம், உருவம், இரசம், கந்தம் என்கிற நான்கையும் மெய் அறியாது. இந்த சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம் என்கிற ஐம்புலன்களை அறிகிற மெய், வாய் கண், மூக்கு, செவி என்கிற ஐந்து பொறிகளின் தொழிற்பாட்டை அறிகிறது ஒன்று உண்டு. அதுதான் உயிர். பொறிகள் உயிராகா.

## நான்காம் அதிகரணம்

### அரும்பதப் பொருள்

ஒடுக்கம்—சூக்கும உடம்பு; சூக்கும உடம்பு—சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம், மனம், புத்தி, அகங்காரம்

இந்த எட்டும் உள்ள உடம்பு; மாறல் — மாற்றுதல்; உயிர்ப்ப—தொழில் செய்வன; செவ்விதின்—செம்மையாக; மீண்டு—திரும்பி; புரிஅட்டக உடம்பு — சூக்கும உடம்பு; ஐம்பொறி—மெய், வாய், கண், மூக்கு, செவி.

## நான்காம் அதிகரணம்

மேற்கோளும் ஏதுவும்:— இனி ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது என்றது.

இதில் ஆன்மா உளது என்றது மேற்கோள். இனி ஒடுக்கம் அறிதலின் என்றது ஏது.

உரை:— சூக்கும தேகம் தூல உடம்புக்குள் இருந்துகொண்டு மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்பொறிகளை வெளியே செலுத்தி விடயங்களை அறியும். ஆதலால் சூக்கும உடம்பே ஆன்மா என்று சூக்கும தேக ஆன்மவாதி சொல்வது பொருந்தாது. ஐந்து பொறிகளும் அடங்கின சொப்பனத்தில் நடந்தவற்றை அறிவது வேறு உண்டு. அதுவே உயிர்.

பொழிப்புரை:— நனவின்கண் கனவு கண்டாம் என்றும், கண்டிலம் என்றும் நிற்பது உளது ஆகலின் அதுவே ஆன்மாவாம் என்றது.

## உதாரண வெண்பா

அவ் உடலின் நின்று உயிர்ப்ப ஐம்பொறிகள் தாம் கிடப்பச்
செவ்விதில் அவ்வுடலில் சென்று அடங்கி—அவ் உடலில்
வேறு ஒன்று கொண்டு விளையாடி மீண்டு அதனை
மாறல் உடல் நீ அல்லை மற்று.

உரைச் சுருக்கம்:— தூல உடம்பில் இருந்து கொண்டு மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்பொறி

களும் தொழில் செய்யும். தூல உடம்பு நித்திரை செய்யும் போது ஐம்பொறிகளும் அந்த தூலஉடம்பில் தொழில் செய்யாமல் அடங்கிக் கிடக்கும். அப்போது உயிர் தூல உடம்புக்குள் இருக்கிற சூக்கும உடம்பை எடுத்துக்கொண்டு வெளியே சென்று வேறு ஒருவிதமாகக் கண்டும், கேட்டும், உண்டும், உயிர்த்தும், விளையாடிவிட்டு, அந்த சூக்கும உடம்பை தூல உடம்புக்குள் விடுவது சூக்கும உடம்பல்ல. உயிரே விடும். ஆதலால் இந்திரியங்களை புறத்தே அறிவதாகிய சூக்கும உடம்பே உயிர் என்பது பொருந்தாது.

## ஐந்தாம் அதிகரணம்

### அரும்பதப் பொருள்.

கண்படில் — தூங்கினால்; சிவனம் — பிழைப்பு; பிரகிருதி—உடம்பு; உயிர்த்தலால் — மூச்சு விடுவதால்; ஊன் — உடம்பு; உண்டி — உணவு; வினை—தொழில்; காட்டு—காட்டுகிற கருவி; உள்ளம்—உயிர்; நண்ணில் —இருந்தால்.

## ஐந்தாம் அதிகரணம்

மேற்கோளும் ஏதுவும் :— இனிக் கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மா உளது என்றது.

இதில் ஆன்மா உளது என்றது மேற்கோள். இனிக் கண்படில் உண்டி வினையின்மையின் என்றது ஏது.

உரை :— தூங்கினபோது இன்பமும் உடலுக்கு இல்லை, துன்பமும் உடலுக்கு இல்லை, அசைவும் உடலுக்கு இல்லை. தூங்காதபோது இன்பம் அடைவதும், துன்பம் அடைவதும் உடல் அல்ல. உடலுக்கு வேறாக ஒன்று உண்டு. அதுவே உயிர்.

### உதாரண வெண்பா

கண்டு அறியும் இவ் உடலே காட்டு ஒடுங்கக் காணுதே
உண்டிவினை இன்றி உயிர்த்தலால் — கண்டு அறியும்
உள்ளம் வேறு உண்டாய் ஒடுங்காது உடல் நண்ணில்
உள்ளதாம் உண்டிவினை ஊன்.

உரைச் சுருக்கம் :— *கருவிகளால் உயிர் ஒன்றைக் கண்டு அறிவதற்கு இடம் இந்த உடம்பு. இந்த உடம்பிலே இருந்துகொண்டு காட்டுகிற கருவிகள் காட்டாமல் அடங்கிக் கிடக்க உடம்புக்கு உண்டியும் இல்லை, தொழிலும் இல்லை. கருவிகள் அடங்கிக் கிடக்கிற அக்காலத்திலும் பிராணவாயு இருக்கிறது. அது இருந்தும் அந்த பிராணவாயுக்கு கண்டு அறிகிற சொந்தம் இல்லையே. கண்டு அறிகிற சொந்தம் உள்ளது உயிரேயாம். அது பிராண வாயுக்கு வேருக உள்ளது. அந்த உயிர் ஒடுங்காமல் உடலில் இருக்குமானுல் அந்த உடம்பு கருவிகளாலாகிய உண்டியையும் தொழிலையும் உடையதாகும். ஆதலால் பிராணவாயுவே உயிர் என்றது பொருந்தாது.*

## ஆரும் அதிகரணம்

### அரும்பதப் பொருள்.

*உணர்த்த—முதல்வன் அறிந்தாங்கு அறிவன் என்று சொல்ல; அதாவது மறந்து மறந்து அறியாதவன் என்று சொல்ல; உணர்தலின்—அறிதலால்; மெய்கண்டான்—சித்தாந்த நெறியைக் கண்டவன்; அகம்—உயிர்.*

## ஆரும் அதிகரணம்

மேற்கோளும் ஏதுவும் :— இனி உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது என்றது.

இதில் ஆன்மா உளது என்றது மேற்கோள். இனி உணர்த்த உணர்தலின் என்றது ஏது.

உரை:— இதுவரையிலும் கூறிய உடல், ஐம்புலன், சூக்கும உடம்பு, பிராண வாயு எல்லாம் சடம். பிரமப் பொருள் அவைகள்போல சடமல்ல, சித்து. ஆதலால் பிரமப் பொருளே உயிராதல் அமையும் என்று சொல்வது பொருந்தாது. கலை முதலிய கருவிகளால் அறிவிக்க அறிந்து வருதலினாலே அப்படி அறிகிற ஆன்மா ஒன்று உண்டு. சித்தாகிய பிரமம் மறந்து மறந்து அறியாமல் அறிந்தாங்கு அறிந்து வருதலால் பிரமமே உயிர் என்பது பொருந்தாது. மறந்து மறந்து அறியாமல் அறிந்தாங்கு அறிவன் முதல்வன் என்று குரு உபதேசிக்கக் கேட்டுள்ளது ஒன்று உண்டு. அதுவே உயிர்.

## உதாரண வெண்பா

அறிந்தும் அறிவதேயாயும் அறியாது
அறிந்ததையும் விட்டு அங்கு அடங்கி—அறிந்தது
எது அறிவும் அன்று ஆகும் மெய்கண்டான் ஒன்றின்
அது! அதுதான் என்னும் அகம்.

உரைச் சுருக்கம் :— கருவிகளோடு கூடி சாக்கிரம் என்கிற புருவ நடுவில் உயிர் இருந்துகொண்டு ஒரு விடயத்தை அறியும். அப்படி அறியும்போதும் எல்லாவற்றையும் அறியாது, ஒன்றனை அறிந்து நிற்கும். ஒன்றனை அறியப் புகும். அறிந்த ஒன்றனை மறக்கும். இப்படி இடையிலே விட்டு விட்டு ஐந்தவத்தைப் பட்டு வரும். அது சடமல்ல, முதல்வனும் அல்ல, சார்ந்ததன் வண்ணமாய் நிற்கிற உயிரேயாம். காட்டும் ஒளிக்கு வேருய கண் ஒளி போல முதல்வனுக்கு வேருகிய உயிரேயாம்.

## ஏழாம் அதிகரணம்

மேற்கோள் :— இனி மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது என்றது.

மேற்கோளின் உரை :— மாயா காரியங்களாகிய 36 தத்துவங்களால் கட்டப்பட்டுள்ள சூத்திரப்பாவை போன்ற இந்த உடம்பினிடத்திலே 36 கருவிகளாகிய மாயா காரியங்களுக்கு ஆன்மா உண்டு.

ஏது :— அவைதாம் வெவ்வேறு பெயர்பெற்று நிற்றலான்

ஏதுவின் உரை :— மாயா காரியங்கள் உடல் என்றும், பொறியென்றும், புலன் என்றும், வெவ்வேறு பெயர் பெற்று நிற்கும். உயிர் என்று பெயர் பெறமாட்டா. ஆகலான் மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா உளது என மேற்கொண்டது.

## உதாரண வெண்பா

கலையாதி மண்அந்தம் காணில் அவைமாயை
நிலையாவாம் தீபமே போல—அலையாமல்
ஞானத்தை முன்உணர்ந்து நாடில் அதுதனுவாம்
தானத்தின் வேறாகும் தான்.

உரைச் சுருக்கம் :— சமுதாயம் ஆவதற்கு உரியவை கலை முதல் நிலம் ஈறாகிய 36 தத்துவங்களேயாம். இந்த 36 தத்துவங்கள் எல்லாம் மாயையின் காரியங்களாம். ஆகலின் சில காலம் இருந்து அழியும். அந்த 36 கருவிகளும் கூடியபோது விளங்கித் தோன்றுவது ஞானம். அந்த ஞானத்தின் இயல்பை ஆராய்ந்து பார்த்தால் அந்த ஞானமே தூலமும் சூக்குமமுமாகிய அந்த உடம்புக்கு வேறாக விளங்கித் தோன்றுவதே உயிராம். கண்ணுக்குக் காட்டுகிறது தீபம். அதுபோல உயிருக்குக் காட்டுகிறது உடம்பேயாம். ஆதலால் சமுதாயமாகிய உடம்பு உயிராகாது.

மூன்றாஞ் சூத்திரம் முடிந்தது.

## இலக்கண இயல்

### நான்காம் சூத்திரம் அரும்பதப் பொருள்.

*அந்தக்கரணம்*—மனம், புத்தி, சித்தம், ஆங்காரம்; *சகச மலம்*—ஆணவ மலம்; *ஏய்ப்ப*—போல; *அவத்தை*—இடம், நிலை; *சாக்கிரம்*—புருவநடு; *சொப்பனம்*—கழுத்து; *சுழுத்தி*—மார்பு; *உணராது*—அறியாமல்; *சந்தித்தது*—கூடினது; *அமைச்சு*—மந்திரி; *அவைத்தத்து*—அவத்தைகளை உடையது; *ஐந்து அவத்தை*—சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம்; *துரியம்*, தொப்புள், (நாபி); *துரியாதீதம்*—அடிவயிறு.

### நான்காம் சூத்திரம்

**அந்தக்கரணம் அவற்றின் ஒன்று அன்றுஅவை**
**சந்தித்தது ஆன்மா சகசமலத்து உணராது**
**அமைச்சுஅரசு ஏய்ப்பநின்று அஞ்சு அவத்தைத்தே**

### நான்காம் சூத்திரத்தின் சுருக்கம்

அந்தக்கரண ஆன்மவாதி என்பவன் அந்தக்கரணங்களே உயிர் என்றான். அது பொருந்தாது. அந்தக்கரணங்கள் என்றால் மனம், புத்தி, சித்தம், ஆங்காரம் என்னும் நான்குமாம். இந்த நான்கும் உயிரல்ல. இந்த நான்குக்கும் வேறாய் உயிர் உண்டு. ஆனாலும் இந்த நான்கையும் உயிர் தனக்கு மந்திரியாக வைத்துக்கொண்டு ஐந்து அவத்தைப்படும். ஐந்து அவத்தை என்றால், ஐந்து நிலை. ஐந்து நிலை என்றால் ஐந்து இடம். ஐந்து இடங்கள் எவை என்றால் சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்பவைகளாம். சாக்கிரம் என்பது புருவநடு. சொப்பனம் என்பது கழுத்து. சுழுத்தி என்பது நெஞ்சு. துரியம் என்பது நாபி அதாவது தொப்புள். துரியாதீதம் என்பது மூலாதாரம் அதாவது அடிவயிறு. புருவ மத்தியில் உயிர் 35 கருவிகளோடு கூடி தொழில்படும். கண்டத்

தில் 25 கருவிகளோடு கூடி தொழில்படும். நெஞ்சில் மூன்று கருவிகளோடு கூடி தொழில்படும். நாபியில் இரண்டு கருவிகளோடு கூடி தொழில்படும். அடிவயிற்றில் ஒரு கருவியோடு இருக்கும். 35 கருவிகளாவன:—

ஞான இந்திரியங்கள் ஐந்து. அவை மெய், வாய், கண், மூக்கு, செவி. கன்ம இந்திரியங்கள் ஐந்து. அவை வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம். வாக்கு என்பது வாய், பாதம் என்பது கால், பாணி என்பது கை, பாயுரு என்பது மலம் கழிக்கும் வழி, உபத்தம் என்பது ஆண் குறி அல்லது பெண்குறி. வசனாதி ஐந்து. அவை வசனம், கமனம், தானம், விசர்க்கம், மைதுனம். வசனம் என்பது சொல்லல், கமனம் என்பது நடத்தல், தானம் என்பது கொடுத்தல், விசர்க்கம் என்பது கழித்தல், மைதுனம் என்பது ஆனந்தப்படுதல் அதாவது புணரும் இன்பம். விடயங்கள் ஐந்து. அவை சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம். சத்தம் என்பது ஓசை, பரிசம் என்பது தொடுதல், உருவம் என்பது வடிவம், இரசம் என்பது சுவை, கந்தம் என்பது வாசனை. வாயு பத்து. அவை பிராணன், அபாணன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்செயன் ஆக பத்து. அந்தக்கரணம் நான்கு. அவை மனம், புத்தி, சித்தம், ஆங்காரம் ஆக நான்கு. புருடன் ஒன்று. ஆக முப்பத்தைந்து. 25 கருவிகளாவன:- மேல்சொன்ன வசனம் முதலான ஐந்து. விடயம் ஐந்து. வாயு பத்து. அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று. ஆக இருபத்தைந்து. மூன்று கருவிகளாவன;- சித்தம், பிராணன், புருடன் ஆக மூன்று. இரண்டு கருவிகளாவன:- பிராணன், புருடன் ஆக இரண்டு. ஒரு கருவியாவது புருடன்.

### முதல் அதிகரணம் அரும்பதப் பொருள்.

அந்தக்கரணம் — மனம், புத்தி, சித்தம், ஆங்காரம்; பிரகாசம் — சித்து; உள்ளம் — உயிர்; சிந்தித்து —

ஆராய்ந்து; புந்தி—புத்தி; போது—சூரியன்; உளம்—உயிர்; நாடில் — ஆராய்ந்தால்; உகாரம் — உகரம்; நண்ணிய—பொருந்திய; பகர்—சொல்லுகிற; மன்னு புலன்கள் — நிலைபெற்ற விடயங்கள்; அப்பிரகாசம் — அசித்து; திரை—அலை; பந்தித்து—பற்றிக்கொண்டு; ஆய்ந்து—ஆராய்ந்து; பகாது—பிரிக்காது; போதம்—அறிவு; அகாரம்—அகரம்; மகாரம்—மகரம்; கண்ணில் —ஆராய்ந்தால்; அதிதெய்வம்—முக்கியமான கடவுள்.

## முதல் அதிகரணம்

**மேற்கோள்:—** ஈண்டு இவ்ஆன்மாவாவது அந்தக் கரணங்களாயுள்ள மனோபுத்தி அகங்கார சித்தங்களில் ஒன்று அன்று என்றது.

**மேற்கோளின் உரை :—** அந்தக்கரணங்களாயுள்ள மனோபுத்தி அகங்கார சித்தங்களில் உயிர் ஒன்றல்ல. அந்தக்கரணங்களுக்கு வேருய் உயிர் என்பது ஒன்று உண்டு.

**ஏது:—** அவைதாம், பிரகாசமாய் நின்றே அப்பிர காசமாய் நிற்றலான்.

**ஏதுவின் உரை:—** அந்தக்கரணங்கள் தம்மின் கீழ் உள்ளவற்றை நோக்கி சித்தாகியும், தம்மை நோக்கி அசித் தாகியும் நிற்பதாம். உயிர் தன்னின் கீழ் உள்ளவற்றையும் நோக்கி சித்தாய் நிற்கும். தன்னை நோக்கியும் சித்தாய் உள்ளதாம். ஆதலால் உயிர் வேறு, அந்தக்கரணங்கள் வேறு.

## உதாரண வெண்பா

மனமாதியால் உணர்தல் மன்னு புலன்கள்
மனமாதிமன் புலனில் அல்லன்—மனமேல்
உதித்தஒன்றை உள்ளம் உணர்தல் அதனின்
உதிக்கும் கடல் திரையை ஒத்து.

உரைச் சுருக்கம்:— மனம் முதலிய அந்தக்கரணங்களால் அறியப்படுவன எவை எனின்? மெய், வாய், கண், மூக்கு, செவி என்கிற ஐம்பொறிகளால் தரப்பட்டு, வெளியே நிலை பெற்றிருக்கிற சப்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம் என்கிற விடயங்களாம். இதற்கு வாயில் காட்சி என்று பெயர். வாயில் காட்சி என்றால் ஐம்பொறிகளால் அறியப்படுவன. உயிர் உணர்வது மனதுக்கு மேலுள்ள புத்தி தத்துவத்தில் தோன்றியவைகளாம். இதற்கு மானதக்காட்சி என்று பெயர். மானதக்காட்சி என்பது மனதால் அறிவது. இந்த வாயில் காட்சியும், மானதக்காட்சியும் ஒன்றன்பின் ஒன்றாக உயிரினிடத்தில் வந்து தோன்றும். ஆதலால் மனம் முதலியவைகள் விடயங்களில் வேறாம். அதுபோல ஆன்மா மனம் முதலியவற்றின் வேறாம்.

## உதாரண வெண்பா

சிந்தித்தாய் சித்தம் தெளியாதாய் ஆங்காரம்
புந்தியாய் ஆய்ந்து மனமாகிப்—பந்தித்து
வெவ்வேறுதானே துணிந்து உள்ளம் இவ்வேறாம்
அவ்வேறாம் போதுபோல் ஆங்கு.

உரைச் சுருக்கம்:— கால தத்துவம் சூரியன் முதலியவற்றோடு கூடிநின்று, நாழிகை, நாள், பக்கம் (பட்சம்), திங்கள், ஆண்டு முதலியனவாய் வேறுபட்டும், அந்த கால தத்துவம் அந்த அந்த சூரியன் முதலியவற்றிற்கு வேறாயினாற்போல புருட தத்துவம் என்று உயிருக்கு ஒரு பெயர் உண்டு.' அந்த புருட தத்துவமாய் நின்ற உயிர், வாயில் காட்சியால் கண்ட விஷயங்களில் ஒன்றை மானதக் காட்சியால் காணும்போது ஒரே விதமாய் இருந்து அறியாது. வெவ்வேறு விதமாக இருக்கும். எப்படி எனில், உயிர் சித்தமாய் நின்று ஒரு விடயத்தை சிந்திக்கும். பின்

அந்த உயிர் மனமாகி நின்று அந்த விடயத்தை இது இன்ன பொருள் என்று அதனைப்பற்றி நிற்கும். அதன் பின்பு அந்த உயிர் ஆங்காரமாய் இருந்து அந்த விடயத்தை இன்னது என ஆராய்வேன் என்று தெளிவு பிறக்காமல் நிற்கும். பின்பு அவ்வுயிர் புத்தியாய் நின்று அவ்விஷயத்தைத் தெளியும். இப்படி உயிர் சித்தமாகியும் மனமாகியும் ஆங்காரமாகியும் புத்தியாகியும் வேறுவேருய் நின்று உணரும். ஆகலான் உயிர் அந்தக்கரணங்களின் வேறு.

## உதாரண வெண்பா

அகாரம் உகாரம் அகங்காரம் புத்தி
மகாரம் மனம் சித்தம் விந்துப்—பகாதுஇவற்றை
நாதம் உளவடிவாம் நாடில் பிரணவமாம்
போதம் கடல்திரையே போன்று.

உரைச் சுருக்கம்:— மானதக்காட்சி என்பது மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் என்கிற அந்தக்கரணங்களால் அறிவது. அப்படி அறியும்போது, அகாரம் என்கிற எழுத்து அகங்காரத்தை கூட இருந்து செலுத்தும். உகாரம் என்கிற எழுத்து புத்தியை கூட இருந்து செலுத்தும். மகாரம் என்கிற எழுத்து மனதை கூட இருந்து செலுத்தும். விந்து என்பது சித்தத்தை கூட இருந்து செலுத்தும். நாதம் என்பது உயிரை கூட இருந்து செலுத்தும். இந்த அகாரம், உகாரம், மகாரம், விந்து இவற்றைச் சேர்த்து யோசித்தால் சூக்ஷமம் பிரணவமாகும்.

## உதாரண வெண்பா.

எண்ணிலவு ஓங்காரத்து ஈசர் சதாசிவமாம்
நண்ணிய விந்துவொடு நாதத்துக்—கண்ணில்
பகர் அயன்மாலொடு பரமன் அதிதெய்வம்
அகர உகர மகரத்தாம்.

உரைச் சுருக்கம்:— உயிரினுடைய எண்ணத்தில் விளங்குகிறது பிரணவம். அந்தப் பிரணவமாகிற ஓங்காரத்தில் பொருந்தி யிருக்கிறது விந்து. அந்த விந்துவுக்கு அதிதெய்வம் மகேசுரம். ஓங்காரத்தில் பொருந்தியிருக்கிறது நாதம். அந்த நாதத்துக்கு அதி தெய்வம் சதாசிவம். ஓங்காரத்தில் பொருந்தியிருக்கிறது அகரம். அந்த அகரத்துக்கு அதி தெய்வம் பிரமனும். ஓங்காரத்தில் பொருந்தியிருக்கிறது உகரம். அந்த உகரத்துக்கு அதி தெய்வம் விஷ்ணுவாம். ஓங்காரத்தில் பொருந்தி யிருக்கிறது மகரம். அந்த மகரத்துக்கு அதிதெய்வம் பரமனும்.

## இரண்டாம் அதிகரணம் அரும்பதப் பொருள்

சகசமலம்—ஆணவமலம்; உள்ளம்—உயிர்; ஆயாது—அறியாது; வன்னி—நெருப்பு; தனு—உடம்பு; வீயாத—கெடாத; காட்டம்—விறகு; மாயாதனு—மாயாகாரியமாகிய உடம்பு; திரோதகம்—மறைத்துக்கொண்டு நிற்றல்; அன்று—அந்தக்காலம் (அதவாது) அநாதியான காலம்.

## இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்:—** இனி இவ்வான்மாச் சகச மலத்தினல் உணர்வு இன்று என்பது.

**மேற்கோளின் உரை:—** அந்தக்கரணங்களில் வேருகிய உயிர் ஆணவ மலம் கூடியிருத்தலால் தன் இயல்பால் உணராது கருவிகளைக்கொண்டே அறியும்.

**ஏது:—** அதுதான் ஞானதிரோதகமாய் மறைத்துக் கொண்டு நிற்றலால்.

**ஏதுவின் உரை:—** ஆணவ மலம் ஞானத்தை மறைத்துக்கொண்டு நிற்றலால் உயிருக்கு அறிவு இல்லை என்பதாம்.

## உதாரண வெண்பா

மாயா தனு விளக்கா(க) மற்றுஉள்ளம் காணுதேல்
ஆயா தாம் ஒன்றை அது அதுவாய்—வீயாத
வன்னிதனைத் தன்னுள் மறைத்து ஒன்றும் காட்டம்போல்
தன்னை மலம் அன்று அணைதல்தான்.

**உரைச் சுருக்கம் :—** விறகு நெருப்பை தன்னுள் மறைத்து வைத்துக்கொண்டிருக்கிறது. சூரியகாந்தக் கல் நெருப்பை தனக்குள் மறைத்து வைத்துக்கொண்டிருக்கிறது. அதுபோல ஆணவ மலம் உயிரை தனக்குள் மறைத்து வைத்துக்கொண்டிருக்கிறது. அதனால் உயிர் ஒன்றை அறியாது. அதனால் மாயா காரியமாகிய உடம்பைக்கொண்டு உயிர் ஒன்றை அறியும். ஆதலால் ஆணவ மலம் அநாதியே உள்ளது. அந்த ஆணவ மலத்தால் விடயத்தை அறியாது. இடையில் வந்த மாயா காரியமாகிய ஆகந்துக மலத்தால் உயிர் விடயத்தை அறியும்.

## மூன்றும் அதிகரணம் அரும்பதப் பொருள்

பஞ்சம்—ஐந்து; அவத்திதன்—அவத்தைப் படுபவன்; மூலம்-மூலாதாரம் அதாவது அடிவயிறு; இதயம்—நெஞ்சு; மன்ற ஏய்—மிகப்பொருந்திய; வாக்காதி—வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம்; உள்ளம்—உயிர்; சொரூபம்—வடிவம்; நாபி—தொப்புள்; நுதல்—நெற்றி; கண்டம்—கழுத்து; இலாடம்—நெற்றி; அத்துறை—அந்த இடம்; அருவம் — கண்ணுக்குத் தெரியாதது; மெய்யாதி—மெய், வாய், கண், மூக்கு, செவி.

## மூன்றும் அதிகரணம்

**மேற்கோள்:—** இனி இவ்வான்மாச் சாக்கிரம, சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதமாயுள்ள பஞ்சா அவத்திதனாய் நிற்கும் என்றது.

மேற்கோளின் உரை:— உயிர், சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்து நிலையை அடையும்.

ஏது:— அதுதான், மல சொரூபத்தில் மறைந்து, அரூப சொரூபியாய் நிற்றலான்.

ஏதுவின் உரை:— அந்த உயிர் ஆணவ மலத்தில் மறைந்துள்ளபோது, கண்ணுக்குத் தெரியாத தத்துவ வடிவமாகி, தத்துவங்கள் தொழில்படுகின்ற அவத்தைகளாகிய சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என்னும் ஐந்து அவத்தைதப்படும்படி நிற்கும்.

## உதாரண வெண்பா

ஒன்றுஅணையா மூலத்துஉயிர் அணையும் நாபியினில்
சென்றுஅணையும் சித்தம் இதயத்து—மன்றஏய்
அய்யைந்தாம் நன்னுதலில் கண்டத்தில் வாக்காதி
மெய்யாதிவிட்டு அகன்று வேறு.

உரைச் சுருக்கம்:— சாக்கிரத்தானம் என்பது நெற்றியாம். நெற்றிக்கு இலாடத்தானம் என்று ஒரு பெயர் உண்டு. அதற்கு நுதல் என்றும் பெயர் உண்டு. அந்த நெற்றியில், மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஞான இந்திரியங்கள் ஐந்தும், வாக்கு, பாதம், பாணி, பாயுரு, உபத்தம் என்கிற கன்ம இந்திரியங்கள் ஐந்தும், சத்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம் என்கிற விடயங்கள் ஐந்தும், வசனம், கமனம், தானம், விசர்க்கம், ஆனந்தம் என்னும் வசனாதி ஐந்தும், மனம், புத்தி, ஆங்காரம், சித்தம் என்கிற அந்தக்கரணம் நான்கும், புருடன் ஒன்றும், இந்த இருபத்தைந்து கருவிகளோடு கூடிய, பிராணன், உதானன், வியானன், சமானன், நாகன், கூர்மன், கிருகரன், தனஞ்செயன், தேவதத்தன் என்னும் வாயுக்கள் பத்தும்

கூடி 35 கருவிகள் தொழில்படும். சொப்பனத்தானமாகிய கழுத்தில், சத்தம், பரிசம் முதலியன ஐந்து, வசனம், கமனம் முதலியன ஐந்து, மனம், புத்தி முதலிய அந்தக்கரணம் நான்கு, புருடன் ஒன்று, பிராணன், அபானன் முதலிய வாயுக்கள் பத்து, ஆக 25 கருவிகள் தொழில்படும். சுழுத்தித்தானமாகிய நெஞ்சில் சித்தம், பிராணன், புருடன் என்கிற மூன்று கருவிகள் தொழில்படும். துரியமாகிய நாபித்தானத்தில், பிராணன், புருடன் என்கிற இரண்டு கருவிகள் தொழில்படும். துரியாதீதம் என்கிற மூலாதாரத்தில் புருடன் ஒன்றே நிலைபெறும்.

## உதாரண வெண்பா

இலாடத்தே சாக்கிரத்தை எய்திய உள்ளம்
இலாடத்தே ஐந்துஅவத்தை எய்தும்—இலாடத்தே
அவ்வவ இந்திரியத்து அத்துறைகள் கண்டுஅதுவே
அவ்வவற்றில் நீங்கல் அதுஆங்கு.

**உரைச் சுருக்கம்:—** உயிர், நெற்றியாகிய இலாடத்தானம் என்கிற சாக்கிரத்தில் 35 கருவிகளோடு இருந்து கீழே இறங்கி, சொப்பனத்தானமாகிய கண்டத்தில் 25 கருவிகளோடு இருந்து கீழே இறங்கி, சுழுத்தித்தானமாகிய நெஞ்சில் 3 கருவிகளோடு இருந்து கீழே இறங்கி, துரியமாகிய நாபித்தானத்தில் 2 கருவிகளோடு இருந்து கீழே இறங்கி, துரியாதீதமாகிய மூலாதாரத் தானத்தில் ஒரு கருவியோடு நின்று, மறுபடியும் மேலே ஏறி, துரியத்தில் சென்று அங்கிருந்து மேலேறி, சொப்பனத்தில் சென்று அங்கிருந்து மேலேறி, சாக்கிரத்தில் பொருந்தியிருக்கும். அந்த சாக்கிரத் தானத்திலேயே இருந்துகொண்டு, சாக்கிரத்தில் சாக்கிரம், சாக்கிரத்தில் சொப்பனம், சாக்கிரத்தில் சுழுத்தி, சாக்கிரத்தில் துரியம், சாக்கிரத்தில் துரியாதீதம் என ஐந்து அவத்தைப்படும்.

நான்காம் சூத்திரம் முடிந்தது.

## ஐந்தாம் சூத்திரம்

### அரும்பதப் பொருள்

*விளம்பிய—சொன்ன; அளந்து—இது இன்னது என்று அளவிட்டு; தாம்—உயிர்; உணர்வின்—அறிவுக்கு; அருள்—சிற்சத்தி; உள்ளம்—உயிர்; அவை போல—அந்த இந்திரியங்கள் போல; தம்—தம்முடைய; தமி—முதல்வன்; பசாசம்—இரும்பு.*

## ஐந்தாம் சூத்திரம்

**விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு**
**அளந்து அறிந்துஅறியா ஆங்குஅவை போலத்**
**தாம்தம் உணர்வின் தமிஅருள்**
**காந்தம் கண்ட பசாசத் தவையே.**

**கருத்து:—** *உயிர்களுக்கு முதல்வன் செய்கிற உதவியை அறிவிக்கிற வழியால் துணைக்காரணம் முதல் காரணங்களின் இலக்கணம் கூறுகிறது.*

### ஐந்தாம் சூத்திரத்தின் சுருக்கம்

*சுடுகிறது, குளிர்கிறது என்று உயிராலே உடம்பு அறிகிறது. ஆனால் அந்த உடல் தன்னை ஒரு உடல் என்று அறியாது. அதுவும் அல்லாமல் தனக்கு சுடுகிறது, குளிர்கிறது என்று அறிவித்த உயிரையும் அறியாது. தித்திக்கிறது, புளிக்கிறது என்கிற சுவையை உயிராலே வாய் அறிகிறது. ஆனாலும் தன்னை ஒரு வாய் என்று அறியாது. அதுவும் அல்லாமல் தித்திப்பையும், புளிப்பையும் தனக்கு அறிவித்த உயிரையும் வாய் அறியாது. இது கோபுரம், இது கோயில் என்று உயிராலே கண் வடிவத்தை அறிகிறது. ஆனாலும் அந்தக் கண் தன்னை ஒரு கண் என்று அறியாது. அதுவுமல்லாமல், இது கோபுரம், இது கோயில் என்று தனக்கு வடிவத்தை அறிவித்த உயிரையும் கண் அறியாது. இது*

மல்லிகை வாசனை, இது சந்தன வாசனை என்று வாசனையை உயிராலே மூக்கு அறிகிறது. ஆனாலும் அந்த மூக்கு தன்னை ஒரு மூக்கு என்று அறியாது. அதுவுமல்லாமல், தனக்கு அந்த வாசனையை அறிவித்த உயிரையும் மூக்கு அறியாது. இது மேள ஓசை, இது வீணை ஓசை என்று உயிராலே செவி அறிகிறது. ஆனால் தன்னை ஒரு செவியென்று அறியாது. அதுவுமல்லாமல், அந்த ஓசையை தனக்கு அறிவித்த உயிரையும் அறியாது. இந்த மெய், வாய், கண், மூக்கு, செவிபோலவே முதல்வனுடைய சிற்சத்தியாலே உயிர் கீழாலவத்தைத, மேலாலவத்தைகளில் இருந்து கொண்டு, வினைப்பயன்களை அறியும். அந்த வினைப்பயன்களையும் அந்த உயிர் அநுபவிக்கும். ஆனால் அந்த உயிர் வினைப்பயன்களை அறியாது. வினைப்பயன்களை அநுபவிக்கும் தன்னையும் ஒரு உயிர் என்று அறியாது. அதுவுமல்லாமல், வினைப்பயன்களை அநுபவிக்கச் செய்கிற கடவுளுடைய திருவருளையும் அந்த உயிர் அறியாது.

## முதல் அதிகரணம் அரும்பதப் பொருள்

ஒற்றித்து—சேர்ந்து; விடயியா—அறியமாட்டா; உள்ளம்—உயிர்; ஐயுணர்வுகள்—மெய், வாய், கண், மூக்கு, செவிகள்.

## முதல் அதிகரணம்

**மேற்கோள்:—** ஈண்டு ஐயுணர்வுகள் ஆன்மாவால் உணரும் என்றது.

**மேற்கோளின் உரை:—** மெய், வாய், கண், மூக்கு, செவிகள் உயிரால் விடயங்களை அறியும்.

**ஏது:—** அவற்றினுல் ஆன்மா ஒற்றித்துக்காணின் அல்லது அவை ஒன்றையும் விடயியா ஆகலான்.

ஏதுவின் உரை:— ஐம்பொறிகளோடு உயிர் ஒற்றுமைப்பட்டு விடயங்களை அறிந்தாலன்றி ஐம்பொறிகள் ஒன்றையும் அறியமாட்டா.

## உதாரண வெண்பா

ஐம்பொறியை ஆண்டுஅங்கு அரசாய் உளம்நிற்ப
ஐம்பொறிகள் உள்ளம் அறியாவாம்—ஐம்பொறியில்
காணுதேல் காணுதுகாணும் உளம் காணுதேல்
காணு கண் கேளா செவி.

உரைச் சுருக்கம்:— அரசன் கொலுமண்டபத்தில் இருந்து கொண்டு, தனக்குக்கீழ் வேலை செய்பவர்களை அவரவர் செய்ய வேண்டிய வேலைகளைச் செய்யும்படி அனுப்புவான். அரசனால் ஏவப்பட்டவர்கள், ஏவின வேலைகளைச் செய்வார்கள். வேறே ஒருவேலையைச் செய்ய மாட்டார்கள். அதுபோல உயிர் இலாடத்தானம் ஆகிய சாக்கிரம் என்கிற புருவ நடுவில் இருந்து கொண்டு, ஐம் பொறிகளை அது அதற்கு உரிய விடயங்களில் செலுத்தும். அந்த ஐம்பொறிகள் ஏவின வேலைகளையே செய்யும். வேறு விடயங்களை அறியமாட்டா. ஆதலால் ஐம்பொறிகள் உயிரை அறியமாட்டா. உயிரும் ஐம்பொறிகள் இல்லாமல் எதையும் அறியாது. உயிரும், ஐம்பொறிகளும் ஒன்றை இன்றி ஒன்று அறியாது. அரசனை இன்றி அமைச்சர் முதலாயினோர் ஒரு வேலையைச் செய்யமாட்டார்கள். அமைச்சர் இல்லாமல் அரசனும் ஒரு வேலையைச் செய்ய மாட்டான். ஆதலால் ஒருவருக்கொருவர் அவசியமேயாம்.

## இரண்டாம் அதிகரணம் அரும்பதப் பொருள்.

சடம்—அறிவு இல்லாதது; அசத்து—உணர்உரு; மீன்—நட்சத்திரம்; உற்று—தீண்டி; இரவி—சூரியன், இயல் — பொருள், உரை; மன்னுதல் — நிலைபெறுதல்;

A.No. 25593



சந்நிதி — முன்னிலை; மன்னுசிவன் — நிலைபெற்ற முதல்வன்; சேட்டித்தது—தொழில்பட்டது; வெய்யோன்—சூரியன்; உயிர்த்து—மூச்சுவிட்டு; ஏய்ந்து—இயைந்து, சேர்ந்து.

## இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்:—** இனி இதுவும் தமது முதலாலே உணரும் என்றது.

**மேற்கோளின் உரை:—** உயிர்களும் தம்முடைய முதல்வனாலே அறிவிக்க அறியும்.

**ஏது:—** இவ்வான்மாத் தன்னாலே உணரும் இந்திரியங்களைப்போல தானும் (தன்+ஐ) தன்னை உணராது நிற்றலால்.

**ஏதுவின் உரை:—** இந்த உயிரினாலே அறியும் இந்திரியங்களைப்போல, உயிரும் தன்னையும் அறியாது, தன் தலைவனையும் அறியாது நிற்றலால்.

### உதாரண வெண்பா

மன்னுசிவன் சந்நிதியில் மற்றுஉலகம் சேட்டித்தது
என்னும் மறையின் இயல்மறந்தாய்—சொன்னசிவன்
கண்ணா உளம்வினையால் கண்டுஅறிந்து நிற்கும்காண்
எண்ணான் சிவன்அசத்தை இன்று.

**உரைச் சுருக்கம்:—** முதல்வனுடைய சந்நிதியில் உலகம் செயல்படுகின்றது. மெய், வாய், கண், மூக்கு, செவியாகிய ஐம்பொறிகள் தமக்கு என்று ஒரு விடயத்தை அறியா. உயிருக்கென்றே அவைகள் அறியும். முதல்வன் உயிருக்குக் காட்ட, உயிர் தன் வினைக்கு ஈடாக ஒன்றனை அறியும். முதல்வன் காட்டினும் அம்முதல்வன் அநுபவியான்.

### உதாரண வெண்பா.

வெய்யோன் ஒளியின் ஒடுங்கி விளங்காது
வெய்யோனை ஆகாத மீன்போல—மெய்யவனில்
கண்டுகேட்டு உண்டுஉயிர்த்து உற்றுஅறியும்
ஐம்புலனைக்
கண்டு உடனாய் மன்னுதலைக் காண்.

உரைச் சுருக்கம்:— விண்மீன் என்பது நட்சத்திரம். நட்சத்திரம் சூரியனிடத்திலிருந்தே ஒளியைப் பெறுகிறது. பெற்றாலும் அந்த நட்சத்திரம் சூரியனைப்போல தான் தனித்து நிற்கிறதும் இல்லை, சூரியனாகவும் ஆகிறதில்லை. ஆனால் சூரியனோடு கலந்து நிற்கும். அதுபோல உயிர், முதல்வனால் ஐம்பொறிகளாலே கண்டு, கேட்டு, உண்டு, உயிர்த்து, உற்று அறியும். அறிந்தாலும், அந்த உயிர், தான் வேறாய் இல்லாமலும், முதல்வனைப்போல ஆகாமலும், முதல்வனோடு கலந்து உடனாய் இருக்கும்.

### உதாரண வெண்பா

அருள் உண்டாம்ஈசற்கு அதுசத்தி அன்றே
அருளும் அவன்அன்றி இல்லை—அருள்இன்று
அவன் அன்றேஇல்லை, அருட்கண்ணார் கண்ணுக்கு
இரவிபோல் நிற்கும்அவன் ஏய்ந்து.

உரைச் சுருக்கம்:— உயிர்களுக்கு உள்ள பசுத்துவத்தை நீக்கி, சிவத்துவத்தை விளக்குதற்கு வேண்டிய இரக்கம், முதல்வனுக்கு அநாதியிலேயே உள்ளதாம். அந்த இரக்கம் என்பது வேறல்ல. முதல்வனிடத்திலுள்ள சத்தியேயாம். இரக்கம் என்பது முதல்வனுடைய குணம். முதல்வன் அந்த இரக்கமாகிய குணத்தை உடையவன். ஆதலால் முதல்வன் குணியாம். குணி என்றால் குணத்தை உடையது எதுவோ அது குணியாம். ஆதலால் அந்த இரக்கமும் அவனை இல்லா

மல் இருக்காது. அவனும் அந்த இரக்கம் இல்லாமல் இருக்க மாட்டான். சூரியன் தன் ஒளியோடு கூடி நிற்பதுபோல முதல்வன் தன் அருளோடு கூடி நிற்பன். பிறர் வயம் இல்லாமல் தன் வசத்தனாய் இருக்கிற முதல் வன் விகாரம் இல்லாமல் தன்னுடைய சத்தியின் நினைவு மாத்திரத்தாலேயே எல்லாம் செய்தல் கூடும்.

ஐந்தாம் சூத்திரம் முடிந்தது.

## ஆறும் சூத்திரம்

### அரும்பதப் பொருள்

உணர்உரு—அறியப்படும் பொருள்; அசத்து—அறியப்படும் பொருள்; இன்மை—சூனியம்; பசுஞானம்—உயிரின் அறிவால் அறிவது; பாசஞானம்—வாக்கு முதலியவற்றால் அறிவது; பதிஞானம்—சிவன் அருளால் அறிவது; இருதிறன்—இரண்டு வகை; உரு—வடிவம்; இசைக்கும்—சொல்லும்.

## ஆறும் சூத்திரம்

**உணர்உரு அசத்துஎனின் உணராது இன்மையின்**
**இருதிறன் அல்லது சிவசத்தாம் என**
**இரண்டு வகையின் இசைக்கும்மன் உலகே.**

கருத்து:— பதி, பசு, பாசம் என்கிற மூன்றினுள்ளே, பதி, பாசம் என்கிற இரண்டிலே, சத்துப்பொருள் எது அசத்துப்பொருள் எது என்று கூறி, பதியின் இலக்கணம் கூறுகிறது.

### ஆறும் சூத்திரத்தின் சுருக்கம்

அசத்து என்றால் அறியப்படும் பொருள். அறியப்படும் பொருள் எல்லாம் அழியும். அறியப்படாத பொருள் எல்லாம் சூனியம். அறியப்படும் பொருள் இந்த உலகம்.

இந்த உலகம் அழியும். அறியப்படாத பொருள் முயற்கொம்பு. முயற்கொம்பு சூனியம். கடவுள் அறியப்படும் பொருள் என்றால் இந்த உலகம்போல அழியும் பொருளாகிவிடும். கடவுள் அறியப்படாத பொருள் என்று சொன்னால் முயல் கொம்பு போல சூனியப் பொருளாகிவிடும். ஆதலால் கடவுள் அறியப்படும் பொருளாகிய உலகம்போல ஆகாது. இன்னும் அந்த கடவுள் அறியப்படாத பொருளாகிய சூனியம் போலவும் ஆகாது. ஆனால் வேறு விதத்தினாலே அக்கடவுள் பசு ஞானத்தாலும் அறியமுடியாத பொருள். பாச ஞானத்தாலும் அறியமுடியாத பொருள். பதிஞானத்தால் அறியப்படும் பொருளாகும். ஆதலால் பசுஞானத்தால் அறியப்படாமலும், பாசஞானத்தால் அறியப்படாமலும் உள்ள பொருள் சிவம். பதிஞானத்தால் அறியப்படுதலின் சத்து. ஆதலால் முதல்வன சிவசத்தாம்.

## முதல் அதிகரணம் அரும்பதப் பொருள்

சுட்டுப் பொருள் — இது குடம், இது துணி என்று அறிகிற பொருள்; பிரகாசம்—உள்ளது என்னும் அறிவும்; அப்பிரகாசம் — இல்லது என்னும் அறிவு; ஆயின் — ஆராய்ந்தால்; பேயத்தேர்—கானல்; ஓரின்—யோசித்தால்; மெய்—சத்து; இன்றும் ஆறு—இல்லை என்பதற்கு.

## முதல் அதிகரணம்

**மேற்கோள் :—** ஈண்டு அறிவினால் அறியப்பட்ட சுட்டு அசத்து என்றது.

**மேற்கோளின் உரை :—** சுட்டு அறிவினால் அறியப்பட்ட சுட்டுப்பொருள் எல்லாம் அசத்து.

**ஏது :—** அவைதாம் பிரகாசமாய் நின்றே அப்பிரகாசமாய் நிற்றலால்.

**ஏதுவின் உரை :—** அந்த சுட்டுப் பொருள்கள் உள்ளது என்னும் அறிவுக்கு விடயமாகி நின்று, இல்லையென்

னும் அறிவுக்கு விடயமாய் நிற்றலால், ஈண்டு அறிவினால் அறியப்பட்ட சுட்டு, அசத்து என மேற்கொண்டது.

### உதாரண வெண்பா

அசத்து அறியாய் கேள்நீ அறிவு அறிந்த எல்லாம்
அசத்தாகும் மெய்கண்டான் ஆயின்—அசத்து அலாய்
நீரில் எழுத்தும் நிகழ்கனவும் பேய்த்தேரும்
ஓரின் அவை இன்றும் ஆறு ஏப்பு.

உரைச் சுருக்கம்:— அசத்து என்பதனுடைய தன்மையை யோசித்துப் பார்த்தால், அறிவினால் அறியப்பட்ட எல்லாப் பொருளும் அசத்தேயாம். நீர்மேல் எழுதப்பட்ட எழுத்துக்கள் தோன்றிய பொழுதே மறையும். அது போல, உலகம் தோன்றியபோதே மறையும். அப்போது உளதாகிய கனவு முடிவு பெறாமல் நடுவில் மறைந்து போகும். அதுபோல, உலகம் தோன்றி நடுவில் மறையும். வெயில் காலத்தில் நடுப்பகலில் மணல்வெளியில் சூரியனுடைய வெயிலால் பேய்த்தேர் தோன்றும். பேய்த்தேர் என்றால் கானல். அந்த கானல் சூரியனுடைய ஒளிமேகத்தில் மறைந்த காரணத்தால் பேய்த்தேரும் ஒளிந்து போகும். அதுபோல உலகம் தோன்றி ஒரு காரணத்தால் மறையும்.

### இரண்டாம் அதிகரணம் அரும்பதப் பொருள்.

தன்மை — குணம்; அதீதம் — அப்பால்பட்டது; கோசரம்—காணப்படுவது; என்கண்ணி—என்ன நினைத்து; உனில்—உன்னில்; தமி—முதல்வன்; பாவகம்—நினைப்பு; பாவித்தல் — நினைத்தல்; சத்து — அழியாத பொருள்; நிர்வசனம்—அறியப்படும் பொருள்; அநிர்வசனம்—அறியப்படாத பொருள்; தாள்—அருள்; உணர்ப—அறிவன; ஆயின்—ஆராய்ந்தால்; பரம்—முதல்வன்; பாழ்இல்—பாழாதல் இல்லை; பாவனாதீதம்—நினைவைத் தாண்டினது.

## இரண்டாம் அதிகரணம்

மேற்கோள் :— இனி இவ்விரண்டு தன்மையும் இன்றி வாக்கு மனாதீதகோசரமாய் நின்ற அதுவே சத்தாயுள்ள சிவம் என்று உணரற்பாற்று.

மேற்கோளின் உரை :— உணரப்படும் பொருளாகிய அசத்தும், உணரப்படாத பொருளாகிய சூனியமும் ஆகிய இரண்டு தன்மையும் இல்லாமல், பாசஞானத்திற்கும், பசு ஞானத்திற்கும் அப்பால்பட்டு ஒற்றுமைப்பட்டு நின்று உணரும் அநுபவ ஞானமாத்திரைக்கே விளங்கி அறியப் படும் பொருளே சத்தாகிய சிவம் என்று உணரற்பாற்று.

ஏது:— பிரகாசத்தினுக்குப் பிரகாசிக்க வேண்டுவது இன்மையானும், அப்பிரகாசத்தினுக்குப் பிரகாசம் இன்மையானும்.

ஏதுவின் உரை:— வாக்கால் ஓதி, மனதால் உணரப் படும் பொருள், நிர்வசனப் பொருள். நிர்வசனப் பொருட்கு அறியப்படும் சாதனங்கள் வேண்டாம். எவ்விதத்தாலும் அறியப்படாத பொருள் அநிர்வசனப் பொருள். அநிர் வசனப் பொருளை அறிய கருவிகள் பயன்படாது. ஆகலான் இப்படி நிர்வசனம், அநிர்வசனம் என்னும் இரு தன்மையும் இல்லாமல் வாக்கு மனாதீதமாய் கோசரமாய் நின்ற அதுவே சத்தாகிய சிவம் என்று உணரற்பாற்று.

### உதாரண வெண்பா

எண்ணிய சத்து அன்று அசத்தன்றும் என்றல்என்
கண்ணி உளது என்றல் மெய்கண்டான்—எண்ணி
அறிய இரண்டாம் அசத்தாதல் சத்தாம்
அறிவு அறியா மெய் சிவன்தாளாம்.

உரைச் சுருக்கம் :— காட்சி முதலிய பிரமாணங்களுக்கு விடயமாவது அசத்து. எவ்விதத்தாலும் பிரமாணம்

இல்லாதது சூனியம். இபபடி விடயமாவதும், சூனியமும் ஆகிய இரண்டும் அசத்தேயாம். ஆதலால் சுட்டு அறிவி ஞல் அறியப்படாத மெய்ப்பொருள் சிவன் அருளேயாம்.

## உதாரண வெண்பா

உணர்வ அசத்தாதல் ஒன்று உணராது ஒன்றை
உணரும் நீதான் உணராயாயின்—உணரும் உனில்
தான் இரண்டாம் மெய்கண்டான் தன்ஞல் உணர்தலால்
தான் இரண்டாய்க் காஞன் தமி.

உரைச் சுருக்கம் :— தத்துவங்கள் 36. இந்த 36 தத்துவங்களும் உயிரால் அறியப்படுவன. அறியப்படுவன வாகிய 36 கருவிகளும் அசத்தாம். அசத்தாம் என்கவே அசித்து ஆதலும் ஆகும். 36 கருவிகளும் அசித்து. ஆத லிஞலே ஒரு கருவியும் முதற்பொருளை அறியமாட்டாது. அந்த கருவிகளால் அறிந்து வருவது உயிர். கருவிகளால் அறிந்து வருகிற உயிரும் முதல்வனை அறியாது. அந்த முதல்வன் உயிருக்கு வேருும். உயிருக்கு முதல்வஞல் அறிவு விளங்கும். அந்த உண்மையை அறிந்த உயிர் தன் னுடைய அறிவு அந்த சிவன் அருளில் அடங்கி சிவன் அருளாய் இருந்து அந்த அருளாலே அந்த முதல்வனை அறியும். உயிர் வேருய் நின்று அறியாது.

## உதாரண வெண்பா

பாவகமேல் தான் அசத்தாம் பாவஞ தீதமெனில்
பாவகமாம் அன்று என்னில் பாழ்அதுவாம்–பாவகத்தைப்
பாவித்தல் தான்என்னில் பாவகமாம் தன்அருளால்
பாவிப்பது பரமில் பாழ்.

உரைச் சுருக்கம் :— முதல் பொருளை பாவிக்கும் பாவனை, மனம் முதலியவற்ருேடு கூடி நின்று பாவிக்கும் பாவகம் என்னில், அந்த பாவனை அறிவிஞல் அறியப்பட்ட சுட்டு ஆகலான், முதற்பொருளாகிய அப்பொருள் அசத்

தாகும். மனம் முதலிய கருவிகளை நீங்கி நின்று பாவிப்ப தாகலான், அந்த பாவனையைக் கடந்தது என்று சொன்னால், கருவிகள் நீங்கியபோது ஒன்றையும் அறியுமாறு இல்லை. அப்படி அறிவது கேவலமாம். அதனால் பயனில்லை. மனம் முதலிய கருவிகளோடு கூடியும், மனம் முதலிய கருவிகளின் நீங்கியும் பாவிப்பது என்றால் அது சூனியமாம். பாவனைக்கு அகப்படாத பொருளை அகப்பட்டதாக வைத்துப் பாவகம் செய்தல் என்று சொன்னால் அது போலிப் பாவனையாம். அது பயனைத் தராது. இந்த பாவனைகளையெல்லாம் தள்ளி முதல்வனுடைய திருவருளினாலே பாவிக்கப்படுவது அந்த பரம்பொருளேயாகும். மற்றப் பாவனைகள் பாழ்.

## உதாரண வெண்பா

அறிய இரண்டல்லன் ஆங்கு அறிவு தன்னால்
அறியப்படான் அறிவின் உள்ளான்—அறிவுக்குக்
காட்டாகி நின்றானைக் கண்ணறியா மெய் என்னக்
காட்டாது அறிவு அறிந்து கண்டு.

**உரைச் சுருக்கம்:—** சிவாகமங்கள் என்பன நூல்கள். அந்த சிவாகம நூல்களில், உயிரும் முதல்வனும் அத்துவிதமென்று கூறுதலின், உயிர் தன் அறிவாலே முதல்வனை அறிதற்கு முதல்வன் உயிரின் வேறல்லன்; ஆதலான் முதல்வனும் உயிரும் தனித்தனியாய் சமமாதல் இல்லை. முதல்வனும் உயிரும் தூலமாயும் சூக்குமமாயும் நிற்கும். உயிர் தூலம், முதல்வன் சூக்குமம். தூலத்துக்குள் இருக்கிற முதல்வனை, தூலமாயுள்ள உயிர் அறியாது. உயிரினுடைய அறிவுக்குக் காட்டும் பொருளாய், உயிருக்கு உயிராய் இருக்கும் முதல்வனை, உயிரினுடைய அறிவானது தனக்கு உயிராயிருக்கிற உயிருக்குக் காட்டமாட்டாது. கண் ஒளி தூலம். உயிர் சூக்குமம். கண் ஒளி, தனக்கு

வேறு இல்லாமல் தன்னுள் தனக்குக் காட்டாகி நிற்கிற உயிரை அறியமாட்டாது. அதுபோல

## உதாரண வெண்பா.

அது என்னும் ஒன்று அன்று அதுவன்றி வேறே
அதுஎன்று அறிஅறிவும் உண்டே—அது என்று
அறிய இரண்டல்லன் ஆங்கு அறிவுள் நிற்றல்
அறியும் அறிவே சிவமும் ஆம்.

**உரைச் சுருக்கம் :—** சத்தாகிய சிவம் சூனியப் பொருளல்ல. ஞேயப் பொருளாம். அந்த ஞேயப் பொருளாகிய சிவத்தை அறிகிற ஞாதா என்கிற உயிரும் ஞேயப் பொருளோடு கூடவே உள்ளதாம். முதல்வன் உயிரின் வேறு அல்லாதவனுகி உயிரின் அறிவிலே கலந்து வேற்றுமையில்லாமல் முதல்வன் நிற்பன். அப்படி முதல்வன் உயிரில் கலந்து நிற்றலால் சுட்டி அறியாமல் உயிர் அறிவிறந்து அறிகிற உயிர் சிவமேயாம். அப்பு அணைந்த உப்புப்போல நீரும், உப்பும் வேறு வேருக இல்லாமல், ஒன்றில் ஒன்று கலந்து வேறு பிரிக்கமுடியாமல் இருப்பதுபோல ஞாதாவும் ஞேயமும் கலந்து நிற்கும்.

ஆரும் சூத்திரம் முடிந்தது.

## ஏழாம் சூத்திரம் அரும்பதப் பொருள்

சூனியம்—ஒன்றும் இல்லாதது; சத்து — அறியப்படும் பொருள்; அசத்து — அறியப்படாத பொருள்; இலது—இல்லாத பொருள்; சதசத்து—சத்தையும் அறிவது, அசத்தையும் அறிவது; இரு திறன் — இரண்டு வகை; சடம்—அறிவு இல்லாத பொருள்.

## ஏழாம் சூத்திரம்

யாவையும் சூனியம் சத்து எதிர் ஆகலின்
சத்தே அறியாது அசத்து இலது அறியாது
இருதிறன் அறிவு உளது இரண்டலா ஆன்மா.

கருத்து:— உயிரின் இலக்கணத்தைக் கூறுகிறது.

## ஏழாம் சூத்திரத்தின் சுருக்கம்

இறைவன் பசுஞானத்தாலும் அறியப்படாத பொருள். பாசஞானத்தாலும் அறியப்படாத பொருள். அறியப்படாத பொருள் சிவம். ஆனால் இறைவன் பதிஞானத்தாலே அறியப்படுவான். ஆதலால் அறியப்படும் பொருள் சத்து. இப்படி முதல்வன் அறியப்படாத பொருளாயும், அறியப்படும் பொருளாயும் இருத்தலினால் முதல்வனுக்கு சிவசத்து என்று பெயர். இனி ஏழாஞ் சூத்திரப் பொருள் அந்த சிவசத்தாகிய இறைவனுக்கு முன்னே அசத்தாகிய உலகம் எதிர்நிற்காது. எதிர்நிற்காதபடியால் சிவத்தையும் அந்த உலகம் அடையாது. சிவசத்தாகிய இறைவனுக்கு உலகம் எதிர்நிற்காதபடியால் அசத்தாகிய உலகத்தை அறியான். அசத்தாகிய உலகம் அறிவில்லாத சடம். ஆதலால், சடமாகிய உலகம் சிவ சத்தாகிய இறைவனை அறியாது. ஆதலால் சத்தாகிய சிவத்தையும், அசத்தாகிய உலகத்தையும் அறியக்கூடிய பொருள் ஒன்று வேறே உண்டு என்று ஏற்படுகிறது. அதுதான் உயிர். அந்த உயிர் சத்தையும் அறியும், அசத்தையும் அறியும். ஆதலால் அந்த உயிருக்குச் சதசத்து என்று பெயர்.

## முதல் அதிகரணம் அரும்பதப் பொருள்.

சுட்டு உணர்வு — இது குடம், இது துணி என்று கண்ணால் அறிவது; பிரபஞ்சம் — உலகம்; மெய் — இயற்கை உணர்வு; அன்னியம்—வேற்றுமை; மாணு— தெரியாமை; கதிர்—சூரியன்; பிரகாசியாது—விளங்கித் தோன்றாது அதாவது சூனியம்; பொய் — செயற்கை அறிவு; சத்து — சுட்டு உணர்வு இல்லாமல் அறிவது; அசத்து — சுட்டி அறியப்படுவது.

## முதல் அதிகரணம்

மேற்கோள்:— ஈண்டு சத்தினிடத்து அசத்துப் பிரகாசியாது என்றது.

மேற்கோளின் உரை:— *சிவசத்து சுட்டு உணர்வு இன்றி அறியும். பிரபஞ்சம் சுட்டி உணரப்படும், சுட்டு உணர்வு இன்றி நின்று அறியும் சிவசத்தின் முன்னர்ச் சுட்டி அறியப்படும். அசத்தாகிய பிரபஞ்சம் விளங்கித் தோன்றுது.*

ஏது :— மெய்யினிடத்துப் பொய் அப்பிரகாசமாய் நிற்றலான்.

ஏதுவின் உரை :— *இயற்கை அறிவுக்கு முன் செயற்கை அறிவு விளங்கமாட்டாது.*

## உதாரண வெண்பா

அன்னியம் இலாமை அரற்கு ஒன்று உணர்வு இன்றும்
அன்னியம் இலாமை அசத்தைக் காண்குவனேல்
—அன்னியமாக்
காணுன் அவன்முன் கதிர்முன் இருள்போல
மாணு அசத்து இன்மை பற்று.

உரைச் சுருக்கம்:— *பதி, பசு, பாசம் என்று மூன்று பொருள்கள் உண்டு. பதிக்குள் பசுவும் பாசமும் அடங்கி யிருக்கின்றன. அதனுல் பதியாகிய முதல்வன் பசு பாசங் களோடு வேற்றுமையில்லாமல் கூடியேயிருக்கிறுன். அப் படி முதல்வன் கூடியே இருத்தலினுலே இது பசு, இது பாசம் என்று சுட்டி அறியக்கிடக்க ஒரு பொருளும் இல்லை. அதனுல் பசு பாசங்களோடு கூடியே இருக்கிற முதல்வன் அசத்தைக் காண்பானுயின் வேருக நின்று சுட்டியறிய மாட்டான். அறிந்தாங்கு அறிவான். சூரியனுக்கு முன்னே இருள் வேருக நிற்காததுபோல, முதல்வனுக்கு எதிரில் பிரபஞ்சம் நிற்கமாட்டாது.*

### இரண்டாம் அதிகரணம் அரும்பதப் பொருள்.

*அசத்து — தத்துவங்கள்; பெற்றிமை — தன்மை; பேய்த்தேர்—கானல் நீர்; வாய்த்தது—கிடைத்தது.*

## இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்:—** இனி அசத்தினுக்கு உணர்வு இன்று என்பது.

**மேற்கோளின் உரை:—** *தத்துவப் பிரபஞ்சத்துக்கு அறிவு இல்லை என்றது.*

**ஏது:—** அதுதான் நிரூபிக்கில் இன்று ஆகலான்.

**ஏதுவின் உரை :—** *அந்த தத்துவங்களின் அறிவு தூலமாய்ப் பார்க்கும்போது அத்தத்துவங்களுக்கு அறிவு உள்ளதுபோலத் தோன்றும். உண்மையால் ஆராயும் போது அத்தத்துவங்களுக்கு அறிவு இல்லை என்பதாம்.*

### உதாரண வெண்பா

**பேய்த்தேர் நீர் என்றுவரும் பேதைக்கு மற்று அணைந்த**
**பேய்த்தேர் அசத்தாகும் பெற்றிமையின்—வாய்த்ததனைக்**
**கண்டு உணர்வார் இல்வழியில் காணும் அசத்தின்மைக்**
**கண்டு உணர்வார் இல்லதெனக் காண்.**

**உரைச் சுருக்கம் :—** *நீர் வேட்கையால் ஒருவன் பாலை நிலத்தில் காணப்படும் பேய்த்தேரை அடைந்த போது, நீர் அல்ல என்று உணர்வான். அதுபோல, அசத்தின் தன்மையை அறியாத ஒருவனுக்கு அசத்தெல்லாம் சத்து என்றே தோன்றும். அசத்தின் தன்மையை ஆராய்ந்து அறிந்தவனுக்கு அசத்து அறிவில்லதாகவே தோன்றும்.*

### மூன்றும் அதிகரணம் அரும்பதப் பொருள்.

*இருதிறன்—இரண்டு வகை; அதாவது சத்து, அசத்து; உபதேசி—அறிவித்தால் அறிவது; ஆய் இழை—நுணு*

கிய நூல்; தொக்குத் தோன்றல் — அடங்கித் தெரிதல்; அஞ்ஞானம்—மயக்கம்; இழை—நூல்; அருஉருவம்—சத்து, அசத்து; பெயர்த்து—மாறி மாறி; சத்து—சத்தியுடையது; தண்கடல்—குளிர்ந்த கடல்; துய்யாமை—அநுபவியாமை; மெய்ஞ்ஞானம்—சிவம்.

## மூன்றும் அதிகரணம்

மேற்கோள் :— இனி இருதிறன் அறிவு உளது இரண்டலா ஆன்மா என்றது.

மேற்கோளின் உரை :— சத்தின் இயல்பையும், அசத்தின் தன்மையும் அறியும் பொருள் எது எனின் சத்து அல்லாததும் அசத்து அல்லாததுமாகிய சதசத்தாகிய உயிராம்.

மேற்கோளின் பொழிப்புரை :— இவ்விரண்டிணையும் அறிவதாய் உபதேசியாய் நின்ற அவ்வறிவு இரண்டன்பாலும் உளதாய் உள்ள அதுவே அவ்வான்மாவாம் என்றது.

பொழிப்புரையின் பொருள்:— சத்தையும், அசத்தையும அறியுந் தன்மையுடையதாய், அறிவிக்க அறிவதாய் சத்தினிடத்திலும் அசத்தினிடத்திலும் நிலைபெற்ற அநுபவ அறிவு உள்ளதாய் உள்ள பொருள் எதுவோ அதுவே சத்தும் அசத்தும் அல்லாத சதசத்தாகிய உயிராம்.

## உதாரண வெண்பா.

அருஉருவம் தான்அறிதல் ஆய்இழையாய் ஆன்மா
அருஉருவம் அன்றாகும் உண்மை—அருஉருவாய்த்
தோன்றி உடன்நில்லாது தோன்றாது நில்லாது
தோன்றல் மலர் மணம்போல் தொக்கு.

உரைச் சுருக்கம்:— உயிர் சத்தையும் அறியும், அசத்தையும் அறியும். ஆதலால் உயிர் சத்தும் அல்ல, அசத்தும் அல்ல. அந்த இரண்டின் வேறு. மலரினிடத்திலே வாசனை இருக்கிறது. அந்த வாசனை, மலர் என்று தனித்து நிற்கிறதும் இல்லை, வாசனை என்று தனித்து நிற்கிறதும் இல்லை. அப்படி யில்லாமல் மலரிடத்திலே வாசனை அடங்கித் தோன்றுகிறது. அதுபோல, உயிர், சத்திலும் அடங்கித் தோன்றும், அசத்திலும் அடங்கித் தோன்றும். தனித்து அறிய முடியாது. அந்த இரண்டினையும் அறியும் முகத்தால் அறியப்படும்.

## உதாரண வெண்பா

**மயக்கமது உற்றும் மருந்தில் தெளிந்தும்**
**பெயர்த்து உணர் நீ சத்தாகாய் பேசில்—அசத்தும்அலை**
**நீ அறிந்து செய்வினைகள் நீ அன்றி வேறுஅசத்துத்**
**தான் அறிந்து துய்யாமை தான்.**

உரைச் சுருக்கம்:— அறிவை விளக்குதற்கு வேண்டிய கருவி இல்லாத பொழுது ஒரு விடயத்தை இன்னது என்று அறிய மாட்டாமல் உயிர் மயக்கத்தை அடையும். அறிவை விளக்குதற்கு வேண்டிய கருவிகள் உள்ள பொழுது, அம்மயக்கம் நீங்கி அந்தப் பொருளை இன்னது என்று அறியும். இப்படி மாறிமாறி அறிந்து வருகிற உயிர் முதல்வனைப்போல அறியும் சக்தி உடையது அல்ல. விளக்குதற்குரிய கருவி உள்ள பொழுது உயிர் முன் அறிந்து செய்த வினைகளை அறிந்து இப்போது அநுபவிக்கும். உயிருக்கு வேருகிய பாசம் அறிந்து அநுபவிக்காது. ஆதலால் பாசத்தைப்போல உயிர் அசத்தனும் அல்ல. ஆதலால் மாறிமாறி அறிதலால் உயிர் சித்தாம்.

## உதாரண வெண்பா.

மெய்ஞ்ஞானந் தன்னில் விளையாது அசத்துஆதல்
அஞ்ஞானம் உள்ளம் அணைதல்காண் —மெய்ஞ்ஞானம்
தானேஉள அன்றே தண்கடல்நீர் உப்புப்போல
தானே உளம் உளவாத் தான்.

உரைச் சுருக்கம் :— காட்டும் கருவிகளாகிய தத்துவங்கள் இல்லாதபோது அஞ்ஞானம் மேற்பட்டுத் தோன்றும். அந்தக் கருவிகள் உள்ளபோது அந்த அஞ்ஞானம் நீங்கிவிடும். ஆதலால் அஞ்ஞானம் நிலைபெற்றிருக்காது. ஞானம் எப்போதும் நிலைபெற்றிருக்கும். நிலையில்லாமல் மாறி மாறி வருகிற அஞ்ஞானம் நிலைபேறுடைய சிவசத்தின் முன் நில்லாது. அந்த சிவசத்து என்று உளதாயிற்றே அப்பொழுதே உள்ளது உயிர். அந்த உயிரையே ஆணவ மலம் தான் பற்றுதற்கு உரிமை உடையது. ஆதலால் ஆணவ மலம் சதசத்தாகிய உயிரைப் பற்றி நிற்கும். எப்படி என்றால் கடல் நீர் உபபுப் போலவாம். கடல் என்பது தரை அல்ல. தரைக்கு மேலும், நீருக்குக் கீழும் உள்ள வெளியாம். அந்த வெளியில் இருப்பது நீர். நீரில் இருப்பது உப்பு. உப்பு நீரில் கலந்து இருக்கிறது. நீர் வெளியில் கலந்து இருக்கிறது. ஆனல் அந்த உப்பு நீரில் கலந்து இருக்கிறதேயன்றி வெளியில் கலந்திருக்கவில்லை. அதுபோல் அஞ்ஞானம் உயிரைப்பற்றியிருக்கிறது. உயிராகிய சதசத்து இறைவனாகிய சிவசத்தைப் பற்றியிருக்கிறது. அந்த அஞ்ஞானம் தனக்கு உரிமை உடைய சதசத்தாகிய உயிரைப் பற்றி நிற்கும். தனக்கு உரிமையில்லாத சிவசத்தைப் பற்றி நிற்காது என்பதாம்.

ஏழாம் சூத்திரம் முடிந்தது.

### எட்டாம் சூத்திரம் அரும்பதப் பொருள்

ஐம்புலன்கள் — மெய், வாய், கண், மூக்கு, செவி; அயர்ந்தனை — மறந்ததாய்; தம்முதல் — தமது கடவுள்; அந்நியம் இன்மை — வேறில்லாமை; அரன் — சிவன்; கழல்—திருவடி; செலும்—அடையும்; உணர்த்த—அறிவிக்க.

## எட்டாம் சூத்திரம்

**ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்து எனத்**
**தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த விட்டு**
**அந்நியம் இன்மையின் அரன் கழல் செலுமே.**

**கருத்து :—** உயிர் ஞானத்தினை உணரும் முறைமையினைக் கூறுகிறது.

**உரைச் சுருக்கம் :—** உயிர் செய்துகொண்ட புண்ணியத்தினாலே, அந்த உயிருக்குள்ளே இருந்த கடவுள், வெளியே குருவடிவங்கொண்டுவந்து, உயிரைப் பார்த்து, "நீ ஐம்புலன்களாகிய வேடரிடத்து அகப்பட்டுக்கொண்டு, அவரிடத்தில் வளர்ந்து, என்னையும் மறந்தாய்," என்று சொன்னார். உயிருக்கு தீக்கையும் செய்துவைத்தார். தீக்கை செய்துகொண்ட உயிர் ஐம்புலன்களாகிய வேடர்களை விட்டு நீங்கிற்று. நீங்கி அந்நியமாய் இல்லாமல் கடவுளுடைய திருவடியை அடைந்தது.

### முதல் அதிகரணம் அரும்பதப் பொருள்

நிகழும்—உண்டாகும்; சரியை — தொண்டு செய்தல் (புறத் தொண்டு) கிரியை — பூசித்தல் (அகப்புறத் தொண்டு) யோகம் — நிட்டை கூடல் (அகத் தொண்டு) நன் நெறி—ஞானம்; இசைத்து—சொல்லி; இறப்பு இல் —அழியாது; பவம்—பிறப்பு; பற்று — ஆசை; நற்சார்பு —நல்லவர் கூட்டம்; நண்ணுதல்—பொருந்துதல்; சூழ் – அறிவு; ஒப்பு – சமானம்; மருவுவன் – பொருந்துவன்.

## முதல் அதிகரணம்

**மேற்கோள் :—** ஈண்டு இவ்வான்மாக்களுக்கு முற்செய் தவத்தால் ஞானம் நிகழும் என்றது.

**மேற்கோளின் உரை:—** *முன், பல பிறவிகளில் செய்த சரியை, கிரியை, யோகங்களாலே குரு உணர்த்திய சிவ ஞானம் கண்ணுக சாதன அறிவு உண்டாகும்.*

**ஏது:—** மேல் சரியை கிரியா யோகங்களைச் செய்துழி நன்நெறியாகிய ஞானத்தைக் காட்டி அல்லது மோட்சத்தைக் கொடா ஆகலான்.

**ஏதுவின் உரை:—** *இப்பிறப்பிலேயன்றி முன்னுள்ள பல பிறவிகளிலே சரியை, கிரியை, யோகம் என்கிற தவத்தைச் செய்தபொழுது அத்தவம் ஞானத்தையும் கொடுத்து மோட்சத்தையும் கொடுக்கும்.*

### உதாரண வெண்பா

தவம் செய்தார் என்றும் தவலோகம் சார்ந்து
பவம் செய்து பற்று அறுப்பாராகத்—தவஞ்செய்த
நற்சார்பில் வந்து உதித்து ஞானத்தை நண்ணுதலைக்
கற்ருர்சூழ் சொல்லுமாங் கண்டு.

**உரைச் சுருக்கம் :—** *சரியை செய்தவர்கள் சிவலோக பதவியை அடைந்து அவ்விடத்திலுள்ள இன்பத்தை அடைவார்கள். கிரியை செய்தவர்கள் சாமீப பதவியை அடைந்து அங்குள்ள இன்பத்தை அடைவார்கள். யோகத்தைச் செய்தவர்கள் சாரூப பதவியை அடைந்து அங்குள்ள இன்பத்தை அநுபவிப்பார்கள். அப்படி அநுபவித்தவர்களுக்கு முன்னே இருந்த உடம்பு இறக்கும் பொழுது அடுத்து எந்த பிறவியை எடுக்கவேண்டியதோ அந்த பிறவியை எடுக்கத்தக்க ஆசை உண்டாகும். அந்த ஆசையை மறுபடியும் நிலத்திலே பிறந்து அநுபவித்து*

நீக்கிக்கொள்ள வேண்டும். அப்படி நீக்கிக்கொள்ளும் பொருட்டு மறுபடியும் தவம் செய்தற்கு உரிய உயர்ந்த குலத்தில் வந்து பிறப்பார்கள். பிறந்து தவக் குறைவால் அந்த ஆசை அதிகரிக்காதபடி அறுத்துத் தள்ளி தத்துவ ஞானத்தை அடைவார்கள்.

### உதாரண வெண்பா

**பசித்துஉண்டு பின்னும் பசிப்பானை ஒக்கும்
இசைத்துவரும் வினையில் இன்பம்—இசைத்த
இருவினை ஒப்பில் இறப்பு இல்தவத்தால்
மருவுவனும் ஞானத்தை வந்து.**

உரைச் சுருக்கம்:— வேள்வி முதலிய தருமங்களினால் வரும் பயனாகிய இன்பம் பசி எடுத்து உண்டு பின்னும் பசிக்கின்றவனுக்கு அந்த உணவினாலே உண்டாகிற இன்பத்தைப்போல அழியும் தருமம் பொன்விலங்கு போன்றது. பாவம் இருப்பு விலங்கு போன்றது. அறமும், பாவமும், இரண்டும் விலங்கில் சமமேதான். அந்த அறம், பாவம் இரண்டும் அனுபவத்தில் கெட்டு ஒழியும். சரியை, கிரியை, யோகங்கள் கெட்டு ஒழியாது. சரியை, கிரியை, யோகங்கள் நேராக ஒத்தால் ஞானகுருவைத் தேடி ஞானகுருவை அடைவர்.

### இரண்டாம் அதிகரணம் அரும்பதப் பொருள்

தமது முதல்—தம்முடைய கடவுள்; அந்நியம் இன்றி—வேறாய் இல்லாமல்; ஏந்திழை—பெண்; பிரளயா கலர்—ஆணவம், மாயை இரண்டும் உடையவர்; சகலர்—ஆணவம், மாயை, கன்மம் மூன்றும் உடையவர்; சைதன்யம்—விளங்குதல்; சகன்—சகக் கடவுள் (முதல்வன்); விஞ்ஞான கலர்—ஆணவம் மாத்திரம் உடையவர்; உணர்த்தும்—அறிவிக்கும்; குறை—குறைகள், அறிதலாகிய

குறை; நெறி—முறை; கொள்பவம்—கொள்ளப்பட்ட தன் உண்மை.

## இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்:—** இனி இவ்வான்மாக்களுக்குத் தமது முதல் தானே குருவுமாய் உணர்த்தும்.

**மேற்கோளின் உரை:—** சரியை, கிரியை, யோகங் களைச் செய்த ஆன்மாக்களுக்கு தமக்கு உள்ளே இருந்து உணர்த்திய பரம்பொருளே வெளியே குருவாய் எழுந்தருளி தத்துவ ஞானத்தை உணர்த்தும்.

**ஏது:—** அவன் அந்நியமின்றிச் சைதன்ய சொரூபி யாய் நிற்றலால்.

**ஏதுவின் உரை :—** முதல்வன் மறைந்து வேறாய் நில்லாமல் குரு வடிவாக விளங்கி நிற்றலாலே ஆன்மாக் களுக்குத் தமது முதல் தானே குருவுமாய் உணர்த்தும் என்றது.

### உதாரண வெண்பா

மெய்ஞ்ஞானந் தானேவிளையும் விஞ்ஞான கலர்க்கு
அஞ்ஞான அச்சகலர்க்கு அக்குருவாய்—மெய்ஞ்ஞானம்
பின்னுணர்த்தும் அன்றிப் பிரளயா கலர்க்கு
முன்னுணர்த்தும் தான்குருவாய் முன்.

**உரைச் சுருக்கம்:—** முதல்வன் விஞ்ஞான கலர்க்குத் தன்மையில் இருந்தபடியே ஞானத்தை உண்டாக்குவான். பிரளயாகலர்க்கு நான்கு தோளும், முக்கண்ணும் முதலிய உறுப்புக்களோடு குரு வடிவாய் வந்து முன்னாக நின்று உபதேசிப்பான். சகலர்க்கு சகலரைப்போல வடிவுள்ள குருவாகி பின்னாக மறைந்து நின்று உபதேசிப்பான்.

## உதாரண வெண்பா

அறிவிக்க அன்றி அறியா உளங்கள்
செறியுமாம் முன்பின் குறைகள்—நெறியில்
குறைவுடைய சொல்கொள்ளார் கொள்பவத்தின் வீடுஎன்
குறைவில் சகன்சூழ் கொள்பவர்க்கு.

உரைச் சுருக்கம்:— உயிர்கள் எல்லாம் ஒரு உயிர் அறிவதுபோல எல்லா உயிரும அறியா. படிப்படியாய் அறிவித்தால்தான் அறியும். பிரளயாகலருக்கு முன்னே இருந்து அறிவிக்க அறிவு உண்டாகும். சகலருக்கு மறைந்து இருந்து அறிவிக்க அறிவு உண்டாகும். விஞ்ஞானகலருக்குத் தனக்குத்தானே அறிவு உண்டாகும்.

## உதாரண வெண்பா

இல்லா முலைப்பாலும் கண்நீரும் ஏந்துஇழைபால்
நல்லாய் உளவாமால் நீர்நிழல்போல்—இல்லா
அருவாகி நின்றானை ஆர்அறிவார் தானே
உருவாகித் தோன்றானேல் உற்று

உரைச் சுருக்கம் :— அன்புக்கு உருவம் இல்லை. தாய்க்குத் தன் குழந்தையினிடத்து உண்டாகிய அன்பை பிறர் அறியும்படி தாயினுடைய முலைப்பாலும் அவளுடைய கண்ணீரும் குழந்தையைக் காணும் முன் இல்லாமல் குழந்தையைக் கண்டபின் காட்டுகிறது. நீரின்கண் நிழல் மறைந்து நிற்றல்போல உயிர்களிடத்து தெரியாமல் மறைந்து நின்ற முதல்வனை, அவனே குரு வடிவாய் வந்து தோன்றி நின்று உணர்த்துவான்.

## மூன்றும் அதிகரணம் அரும்பதப் பொருள்

ஐயுணர்வு—மெய், வாய், கண், மூக்கு, செவிகளால் அறிதல்; பளிங்கு—கண்ணாடி; வன்னம்—வர்ணம், நிறம்;

படிகம்—கண்ணாடி; தகை—தகுதி; புலன்—விஷயம்; தைவம்—அடிமை; காட்டிற்றை—காட்டினவைகளை.

## மூன்றும் அதிகரணம்

மேற்கோள்:— இனி இவ்வான்மாக்கள் ஐஉணர்வு களால் மயங்கித் தம்மை உணரா என்றது.

மேற்கோளின் உரை:— அறிவிக்க அறியும் உயிர் கள் மெய், வாய், கண், மூக்குச் செவியாகிய ஐம்பொறிக ளாலே மயங்கித் தம்மை அறிய மாட்டா.

ஏது:— அவைதாம் பளிங்கில் இட்ட வன்னம்போல காட்டிற்றை காட்டி நிற்றலால்.

ஏதுவின் உரை:— கண்ணாடிப் பாத்திரத்தில் வைத்த பல நிறங்கள் அந்தக் கண்ணாடிப் பாத்திரத்தின் ஒளியை அடக்கி விடும். அதில் வைக்கப்பட்ட நிறங்கள் தங்கள் தங்களுடைய நிறங்களையே காட்டும். அதுபோல மெய், வாய், கண், மூக்கு, செவி என்கிற பொறிகள் உயிரி னுடைய வடிவத்தை மறைத்து தங்களால் காட்டப்பட்ட விஷயத்தையே அந்த உயிருக்குக் காட்டும். ஆதலால் ஆன்மாக்கள் அந்த மெய், வாய், கண், மூக்கு, செவிகளால் மயங்கித் தம்மை யறியாது

## உதாரண வெண்பா

பன்நிறங் காட்டும் படிகம்போல் இந்திரியம்
தன்நிறமே காட்டும் தகைநினைந்து—பன்னிறத்துப்
பொய்ப்புலனை வேறுஉணர்ந்து பொய்பொய்யா மெய்கண்டான்
மெய்ப் பொருட்குத் தைவமாம் வேறு.

உரைச் சுருக்கம்:— கண்ணாடி தன் இடத்திலே சேரப்பட்ட பல நிறங்களையே தன்னிடத்தில் காட்டும். அது போல உயிர் தன்னிடத்தில் சேரப்பட்ட பொறிகளின்

இயல்பையே தன் இடத்தில் காட்டும். பல நிறங்களும் கண்ணாடிக்கு வேறுதல்போல பல பொறிகளும் உயிருக்கு வேறு என்று உயிர் தன் இயல்பை உணர்ந்தால் முதல்வனுடைய இயல்பு தன்னிடத்தில் விளங்கித் தோன்றும். ஆதலால் சிவசத்துக்கு உயிர் அடிமை ஆகும் என்பதாம்.

## நான்காம் அதிகரணம் அரும்பதப் பொருள்.

சிறை—கட்டு; புனல்—தண்ணீர்; புலன்—அறிவு; தீர்ந்து—நீங்கி; மீளாது—திரும்ப வராது; உலைவுஇல்—கெடுதல் இல்லாத; எய்துவார்—அடைவார்; சத்திநிபாதம் — அநுக்கிரக சத்தியில்; இறை — முதல்வன்; கண்பேறு — கண்ணின் தன்மை; அந்தர — சகலன்; அணை—சேர்; சீபாதம்—அழகிய பாதம்; தாய்—தாயானவள்; புலன் உணர்வு—ஐம்பொறிகளால் அறியும் அறிவு.

மேற்கோள் :— இனி இவ் ஆன்மாத்தன்னை இந்திரியத்தின் வேறுவான் காணவே தமது முதல் சீபாதத்தை அணையும்.

மேற்கோளின் உரை:— உயிர் தன்னை இந்திரியத்தின் வேறாகக் கண்டால் தமது முதல்வனுடைய திருவடியை அடையும்.

ஏது:— ஊசல் கயிறு அற்றால் தாய் தரையே யாம் துணையான்.

ஏதுவின் உரை :— ஆடுதற்கு ஆதாரமான ஊசல், கயிறு அற்றால் ஆதாரமாவது நிலமேயாம். அதுபோல ஆன்மா, தன்னைப் பொறிகளின் வேறாகக் காணவே தமது முதல்வனுடைய சீபாதத்தை அணையும்.

## உதாரண வெண்பா.

சிறை செய்ய நின்ற செழும்புனலின் உள்ளம்
சிறை செய் புலன் உணர்வில் தீர்ந்து—சிறைவிட்டு

அலைகடலில் சென்று அடங்கும் ஆறுபோல் மீளாது
உலைவுஇல் அரன் பாதத்தை உற்று.

உரைச் சுருக்கம்:— ஆற்றுத் தண்ணீர் ஓடாதபடி ஒருவன் அணையைக் கட்டித் தடுக்கத் தடைபட்டுத் தேங்கி இருந்த ஆற்று நீர், அணை உடைந்து தடை நீங்கின போது, வேகமாய்க் கடலில் போய்ச் சேர்ந்து, கடல் நீராகவேயாகும்; திருமபி வராது. அதுபோல உயிரினுடைய வியாபக அறிவைத் தத்துவங்களால் ஆகிய பாசஞானம் தடைசெய்ய, தடையுண்டு நின்ற உயிர், பாசஞானமாகிய தடையிலிருந்து நீங்கியபோது சிவபிரானுடைய திருவடியைக் கூடி திருவடியின் நிறைவேயாய் அத்திருவடியில் அடங்கிப் பின் திரும்பாது.

## உதாரண வெண்பா

எவ் உருவும் தான் என்னில் எய்துவார் இல்லை
இவ் உருவின் வேறேல் இறைஅல்லன்—எவ்உருவும்
கண்போல் அவையவங்கள் காணு அக்கண் இல்லார்
கண்பேறே காணக் கழல்.

உரைச் சுருக்கம்:— மெய், வாய், கண், மூக்கு, செவிகளில் உயிர் ஏற்றத் தாழ்வு இல்லாமல் ஒரே மாதிரியாய் இருக்கும். அப்படி நின்றாலும் மெய்யும், வாயும், மூக்கும், செவியும், பரிசம், உருசி, வாசனை, சத்தங்களை இருக்கிற இடத்துக்குப் போய் அவை அறியமாட்டா. கண் அவைகளைப்போல தன்னிடத்துக்கு வந்தபின் அறியாமல் உயிரோடு கலந்து தூரத்துக்குப்போய் 'தூரத்திலுள்ள பொருளை அறியும். அதுபோல, முதல்வன் உயிர் உணர்வுடனும், புலன் உணர்வுடனும் வேற்றுமையின்றி கலந்து இருக்கிறான். இருந்தாலும், உயிர் உணர்வும், புலன் உணர்வும் ஆகிய இரண்டும் ஒப்பாகமாட்டா. புலன்

உணர்வு ஏகதேச உணர்வாகவே இருக்கும். உயிர் உணர்வு வியாபக அறிவாக விளங்கும்.

## உதாரண வெண்பா

ஐம்பொறியின் அல்லேயெனும் அந்த தரசிவனே
ஐம்பொறியை விட்டு அங்கு அணே சகலன் — ஐம்பொறியின்
நீங்கான் நீர்ப்பாசிபோல் நீங்கும் மலகன்மம் வரின்
நீங்கானே நீங்கும் நினைந்து.

உரைச் சுருக்கம்:— மாணுக்கர்கள்; மந்தம், மந்தரம், தீவிரம், தீவிர தரம் என நான்கு வகைப்படுவார்கள். இந் நான்கு வகைகளில் தீவிர தரம் மேலானது. தீவிர தரத்திலும் தீவிர தரமானவனே சத்திநிபாதம் உடையன் ஆவான். சத்திநிபாதம் என்ருல் அனுக்கிரகசத்தி பதிதல். சத்திநிபாதம் உடையவனுன ஏ மாணவகனே, நீ சித்தாந்த மகா வாக்கியத்தைப் பெற்றுடையவன். சித்தாந்த மகா வாக்கியமாவது சிவத்துவமசி என்பதாம். அந்த வாக்கியம் சிவம்+துவம்+அசி என பிரிக்கப்படும். அதற்கு சிவம் நீ ஆனாய் என்பது பொருள். ஆதலால் ஐம்பொறிகள் போல நீ ஏகதேச அறிவை உடையவன் அல்லன். ஐம்பொறிகளை விட்டுச் சிவனை அணேந்த சகலன் ஆதலால், நீ சிவனது திருவடியை விட்டு மறுபடியும் ஐம்பொறிகளின் வழி திரும்பமாட்டாய். அங்ஙனம் நீ அணேந்திருந்தபோது உன்னைவிட்டு நீங்கிய மலம், கன்மம், மாயைகள் வாதனை வசத்தால் வந்து உன்னைக் கூடினுல் பொறிவழி மீளாமல் ஐந்தெழுத்தை ஓதுதலாகிய உபாயத் திஞலே முதல்வனை சிந்தித்து நீக்கிக் கொள்ளுக.

எட்டாம் சூத்திரம் முடிந்தது.

## ஒன்பதாம் சூத்திரம் அரும்பதப் பொருள்

ஊனம் — குறைவு; கண் — அறிவு; ஊனக்கண்— குறைந்த அறிவாகிய பசுஞானம்; சிந்தை—மனம்; நாடி —ஆராய்ந்து அறிக; ஊரா—ஓட்டாத; துனை—வேகம்; பசுஞானம் — உயிரால் அறிவது; காட்சி — பார்த்தல்; கோசரம்—கண்ணுக்குத் தெரிவது; தேர்த்து — தேரை உடையது; ஒருவ — நீங்க; தண் — குளிர்ச்சி; பதி — முதல்வன்; விதி—முறை; ஞேயம்—அறியப்படும் பொருள் அதாவது முதல்வன்; பதி — பதிஞானம், முதல்வனால் அறிவது; அதீதம்—அப்பாற்பட்டது; பாசஞானம்— வாக்குகளால் அறிவது.

## ஒன்பதாம் சூத்திரம்

**ஊனக்கண் பாசம் உணராப் பதியை**
**ஞானக் கண்ணினில் சிந்தை நாடி**
**உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்**
**தண்ணிழலாம் பதி விதி எண்ணும் அஞ்செழுத்தே.**

**கருத்து :—** உயிர் அழுக்கு நீங்கிச் சுத்தமாகும் விதத்தைக் கூறுகிறது.

**உரைச் சுருக்கம் :—** பசுஞானத்தாலும்; பாசஞானத் தாலும் அறியமுடியாத முதல்வனை பதிஞானத்தாலே சிந்தையில் ஆராய்ந்து அறிக. அப்படி ஆராய்ந்தால் முப்பத்தாறு தத்துவங்களும் பேய்த்தேர் போன்றது என நினைக்க அவை உன்னை விட்டு நீங்கும். பேய்த்தேர் என்றால் கானல் நீர். அப்படி பாசக் கூட்டம் நீங்கினபோது பதிஞானம் உன்னுடைய பிறப்பு என்கிற வெயிலுக்குக் குளிர்ச்சியாகிய நிழலாக விளங்கும். அது நீங்கவே பதி ஞானம் உண்டாகும். அந்த பதிஞானத்தாலே ஞேயமாகிய இறைவனைக் காணலாம். அப்படி முதல்வனைக் கண்ட காட்சி கெடாதபடி அஞ்செழுத்தை விதிப்படி உச்சரித்தல்

வேண்டும். விதிப்படி உச்சரித்தாலாவது சிவயநம என்பதில் 'சி' சிவம் என்றும், 'வ' அருள் என்றும், 'ய' உயிர் என்றும், 'ந' திரோதம் என்றும், 'ம' மலம் என்றும் அறிந்துகொள்ளவேண்டும். அப்படி அறிந்தபின் திரோதமும், மலமும் உயிருக்குக் கூடாமையால் திரோதமும், மலமும் ஆகிய நம என்பதை நீக்கி சிவய என்று சொல்ல வேண்டும். அந்த சிவய என்பதில் 'ய' என்கிற உயிரை நடுவில் வைத்து முன்னும் பின்னும் 'வ' கரத்தை 'வா' என்று வைத்து அந்த இரண்டு 'வா'என்பதையடுத்து 'சி' கரத்தை வார்த்தையில் முன்னும் பின்னுமாக இருக்கும்படி வைத்து 'சிவாயவாசி' என்று உச்சரித்தல் வேண்டும்.

## முதல் அதிகரணம் அரும்பதப் பொருள்

*முதலை — முதற் கடவுளை; வாக்கு — பாசஞானம்; மனம்—பசுஞானம்; அதீதம்—அப்பாற்பட்டது; கோசரம் —அறியக்கூடியது; நாடி—இடைகலை, பிங்கலை, சுழுமுனை என்கிற நாடிகள்; சீ — புண்ணிலுள்ள நீர்; கோழை — சிலேட்டும நாடி; கள்வன்—மறைந்து நிற்கிற முதல்வன்; காட்டாய்—காட்டுகிறதாகிய; உள்ளம்—உயிர்.*

## முதல் அதிகரணம்

**மேற்கோள் :— ஈண்டு அம்முதல்வனை ஞானக் கண்ணாலே காண்க என்றது.**

**மேற்கோளின் உரை:—** *பாசஞான பசுஞானங்களால் அறியமுடியாத முதல்வனைப் பதிஞானத்தினாலே அறிக.*

**ஏது:— அவன் வாக்கு மனாதீத கோசரமாய் நிற்றலான்.**

**ஏதுவின் உரை:—** *பாசஞான பசுஞானங்களாலே அறியப்படாத அந்த முதல்வன் பாசஞான பசுஞானங்க*

ளுக்கு எட்டாமல் நிற்பதால் அந்த முதல்வனை ஞானக் கண்ணாலே காண்க என்பதாம்.

## உதாரண வெண்பா

நாடியோ என்போ நரம்புசீக் கோழையோ
தேடிஎனை அறியேன் தேர்ந்தவகை—நாடிஅரன்
தன்னாலே தன்னையுங்கண்டு தமைக்காணார்
என்னும் என அறிவார் இன்று.

**உரைச் சுருக்கம்:—** நான் நாடியா? நரம்பா? சீயா? கோழையா? இவற்றுள் யான் யார் என்று தேடினேன்? அப்படித் தேடும்பொழுது உயிரைத் தெரிவிக்க வேறு ஒரு அறிவு உண்டு என்று அறிந்தேன். அந்த அறிவு பதிஞானமேயாகும். அந்தப் பதிஞானத்தினாலே என்னை யுங் கண்டேன். இறைவனையுங் கண்டேன். இறைவன் வியாபகம் என்றும் யான் வியாப்பியம் என்றும் உணர்ந் தேன்.

## உதாரண வெண்பா.

காட்டிய கண்ணே தனைக்காணா கண்ணுக்குக்
காட்டாய உள்ளத்தைக் கண்காணா – காட்டிய
உள்ளந்தனைக் காணா உள்ளத்தின் கண்ணாய
கள்வன்தான் உள்ளத்தில் காண்.

**உரைச் சுருக்கம்:—** உயிர் ஒரு பொருளைக் கண் ணுக்குக் காட்டுகிறது. அந்தக்கண் அந்த உருவத்தைக் காண்கிறது. ஆனால் அந்தக்கண் தன்னுடைய தன்மை யைக் காணாது. தனக்குப் பொருளைக் காட்டிய உயிரையும் காணாது. அதுபோல மறைந்து நின்று முதல்வனாலே காட்டப்பட்ட ஒரு விஷயத்தை உயிர் அறியும். ஆனால் அந்த உயிர் தன்னுடைய இயல்பை அறியாது. தனக்கு

அறிவித்த முதல்வனையும் அறியாது. அப்படி அறிகிற அறிவிலே உடனாக நிற்கிற கள்வன் முதல்வனே. ஆதலால் அவனை அந்த அறிவிலே நாடித் தெளியவேண்டும்.

**இரண்டாம் அதிகரணம் அரும்பதப் பொருள்.**

அசத்து—நிலையில்லாதது; வன்னபேதம்—உலகம்; சொரூபம் — இயல்பு, தன்மை; இயல்பு — தன்மை; நித்தியாநந்தன் — எப்பொழுதும் இன்பத்தோடு இருப்பவன்; அண்டனை—கடவுளை; ஊனம்—பொது இயல்பு; சானம்—தியானம்; ஆறு—கெடாத; சட்ட—செம்மையாக; புணர்ந்து—கூடி; ஒண்—ஒளி; படிகம்—கண்ணாடி; நிர்க்குணன்—குணமில்லாதவன்; நின்மலன்—மலம் இல்லாதவன்; தற்பரன் — அதற்கு மேலானவன்; வான் — ஆகாயம்; களையின்—கழித்தால்; அளவிறந்து—கணக்கு இல்லாமல்; தைவம் — அடிமை; பண்டு — அநாதி; வன்னபேதம்—வேற்று இயல்பு.

## இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்:—** இனி அசத்தாயுள்ள வன்னபேதங்களை அசத்து என்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபம் என்று உணரற்பாற்று.

**மேற்கோளின் உரை :—** நிலையில்லாத உலகங்களை நிலை இல்லாதது என்று அறிந்தால் அப்போது நிலைத்துத் தோன்றுவது பதிஞானத்தின் இயல்பு என்று அறிக.

ஏது:— இந்த மேற்கோளில் ஏது அடங்கி இருக்கிறது.

இந்த மேற்கோளில் உள்ள ஏதுப்பொருளை மேற்கோளுக்கு வேறாக வைத்துக் காண்கின்ற விதமாவது.

இனி அசத்தாயுள்ள பிரபஞ்சத்தை அசத்தென்று காண உளதாய் நிற்பது ஞானசொரூபம் என்றது வேற்றியல்பாகிய வன்னபேதங்களை வேற்றியல்பு எனக்கண்டு

கழிப்பின், உள்தாய் நிற்பது படிக சொரூபமாம் துணையால் என வரும்.

ஏதுவின் உரை:— கண்ணுடியின் வடிவத்தைக் காட்டாமல் மறைத்து நின்ற வேற்று நிறங்களை நிலையுதல் இல்லை என்று கண்டால் அப்போது பளிங்கினுடைய உருவம் தெரியும். அதுபோல தன்னுடைய தன்மையைக் காட்டாமல் மறைத்துக்கொண்டிருக்கிற நிலையில்லாத உலகத்தை நிலையில்லை என்று அறிந்தால் அப்போது ஞான சொரூபம் விளங்கித் தோன்றும்.

## உதாரண வெண்பா

நிர்க்குணனுய் நின்மலனுய் நித்தியா நந்தனுய்த்
தற்பரமாய் நின்ற தனி முதல்வன்—அற்புதம்போல்
ஆனு அறிவாய் அளவிறந்து தோன்றுனே
வானே முதல் களையின் வந்து.

உரைச் சுருக்கம்:— பிரபஞ்சம் என்ருல் உலகம். இந்த உலகம் மூன்று வகைப்படும். அந்த மூன்று வகை யாவன: (1) சுத்தப் பிரபஞ்சம், (2) அசுத்தப் பிரபஞ்சம், (3) சுத்தாசுத்தப் பிரபஞ்சம் என்பன. அசுத்தப் பிரபஞ்சம் என்பன, அசுத்த மாயையின் காரியமான உலகம். அவை ஆத்தும தத்துவம் என்கிற இருபத்து நான்கு தத்துவங்களாம். சுத்தப் பிரபஞ்சம் எனபவை சுத்த மாயையின் காரியமான உலகம். அவை சிவதத்துவம் என்கிற தத்துவங்கள் ஐந்துமாம். சுத்தாசுத்தப் பிரபஞ்சம் என்பவை மிச்சிர மாயையின் காரியமாகிய வித்தியா தத்துவங்கள் ஏழுமாம். குணம் மூன்று வகை. சத்துவ குணம், இராசத குணம், தாமத குணம். அசுத்த மாயைக்கு இந்த மூன்று குணங்களும் உண்டு. முதல்வனுக்கு இந்த மூன்று குணமும் இல்லை. அதனுல் முதல்வன் நிர்க்குணனும். சுத்தாசுத்தப் பிரபஞ்சம் நிர்க்குணமாய் உள்ளது

தான். ஆனாலும், மலம், மாயை, கன்மங்களோடு கூடியது. முதல்வனுக்கு இந்த மலம், மாயை, கன்மங்கள் இல்லை. அதனால் முதல்வன் நின்மலனாம். சுத்தப் பிரபஞ்சம் மலத்தையும், மாயையையும், கன்மத்தையும் தாண்டியது. ஆதலால் அந்தப் பிரபஞ்சம் அநித்தியாநந்த வடிவமாயுள்ளது. முதல்வன் சுத்தப் பிரபஞ்சத்தைப் போன்றவன் அல்லன். அதனால் முதல்வன் அநித்தியாநந்தனாய் இல்லாமல் நித்தியானந்தனாம். இந்த மூன்று குணங்களையும் உடைய உயிர் போல் இல்லாமல் உயிருக்கு மேலாய் உள்ளவன் அந்த முதல்வன். சுட்டறிவினுக்கு அப்பால்பட்டவன். சுட்டிறந்து அறியும் தன் அறிவினிடத்தில் நீங்காது நிற்பான். அப்படி நிற்றலே சோதிக்குள் சோதியாம்.

### உதாரண வெண்பா

சுட்டி உணர்வதனைச் சுட்டி அசத்து என்னச்
சட்ட இனிஉளது சத்தேகாண்—சுட்டி
உணர்ந்த நீ சத்தல்லை உண்மையைத் தைவம்
புணர்ந்து அதனால் பொய்விட்டுப் போம்.

உரைச் சுருக்கம்:— இது குடம், இது துணி என்று கண்ணால் சுட்டி உணரப்படுகின்ற இந்த உலகத்தைத் தள்ளவேண்டும். அப்படித் தள்ளியபொழுது செம்மையாகத் தோன்றுவது சத்தேயாகும். அந்த சத்து உயிரல்ல. ஏன் எனின் அகத்தோடு கூடி சுட்டி அறியப்பட்டது. அந்த உயிரானதால், அதுவும் அசத்தாம். சத்து ஆகாது. அசத்தின் வசப்பட்டு நின்ற உயிர், சத்தின் வயப்பட்டு நின்றால், சுட்டுணர்வு உயிரைவிட்டு நீங்கும்.

### உதாரண வெண்பா

கண்டதை அன்று அன்று எனவிட்டுக் கண்டு அசத்தாய்
அண்டனை ஆன்மாவில் ஆய்ந்து உணரப் — பண்டு
அணைந்த

**ஊனத்தைத் தான் விடுமாறு உத்தமனின் ஒண்கருட சானத்தில் தீர்விடம் போல் தான்.**

உரைச் சுருக்கம்:— இது குடம், இது துணி என்று சுட்டி கண்ணுல் அறியக்கூடியது இந்த உலகம். அப்படி சுட்டி அறியக்கூடிய உலகத்தை, இது சத்து அல்ல, இது சத்து அல்ல என ஒழித்துக்கொண்டு வரவேண்டும். அப்படி ஒழித்து உயிர் தன் அறிவிலே முதல்வனை ஆராய்ந்து சோகம்பாவனை செய்யவேண்டும். அப்படி சோகம்பாவனை செய்தால், கருட தியானம் செய்கிறவனுக்கு அத்தியானத்தால் கருடன் மந்திர வடிவாய் விளங்கித் தோன்றுவான். தோன்றிய கருடனுல் விடத்தைத் தீர்ப்பான். அதுபோல அந்த சோகம்பாவனையால் அத்துவிதமாய் முதல்வன் விளங்கித் தோன்றுவான். அத்துவிதமாய்த் தோன்றிய முதல்வனுல் சோகம்பாவனை செய்பவன் மலம், மாயை, கன்மங்களை நீக்கிக் கொள்ளலாம்.

## மூன்றும் அதிகரணம் அரும்பதப் பொருள்

விதிப்படி—பாசத்தை விட்டு ஞானக்கண்ணுல் நாடுதல்; உச்சரிக்க — மனதில் எண்ண; பஞ்சாக்கரம் — முத்தி பஞ்சாக்கரம்; இவ்விடத்து — முதல்வனைக் கண்டவிடத்து; இதயம்—நெஞ்சில்; கோதண்டம்—புருவநடு; அண்டன்—முதல்வன்; இந்து — சந்திரன்; உந்தவே — கடையவே; காட்டம்—விறகு; ஆள்—அடிமை; வித்தை —வித்தியாதத்துவம்; கலை—ஓர் தத்துவம்; நேர்—ஒப்ப; தாள்—திருவடி; பிரகாசித்து—உண்டாகி; நோக்கிற்றை நோக்கி நிற்கும் — பார்த்ததையே பார்த்துக்கொண்டு இருக்கும்; அரன் உடைமை — சிவனுடைய உடைமை; குண்டலி—உந்தி அதாவது நாபி; சானிக்கில்—தியானிக்கில்; சேடன்—அடிமை; பானு—சூரியன், காட்டாக்கில் — கட்டையிலுள்ள நெருப்பில்; கனல் — நெருப்பு; நாளம்—தண்டு; கலாரூபம்—கலை முதலாகிய தத்துவம்;

கேசரம்—தாமரைப்பூவில், மடலுக்கு மேலும், காய்க்கு கீழும் உள்ள கம்பி போன்ற பொருள்கள்.

## மூன்றும் அதிகரணம்

மேற்கோள்:— இனி இவ்விடத்து ஸ்ரீ பஞ்சாக்கரத்தை விதிப்படி உச்சரிக்க என்றது.

மேற்கோளின் உரை:— பாசத்தை விட்டு ஞானக் கண்ணால் முதல்வனை மனதில் கண்டபின் திரு ஐந்து எழுத்தையும், மனதினாலே எண்ணல் வேண்டும்.

ஏது:— இவ் ஆன்மாக்களுக்கு ஞானம் பிரகாசித்தும், அஞ்ஞானத்தை வேம்புத் தின்றப் புழுப்போல் நோக்கிற்றை நோக்கி நிற்கும் ஆகலின் அது நீக்குதற்கு எனக் கொள்க.



ஏதுவின் உரை:— வேம்பைத் தின்ற புழு கரும்பைத் தின்று அதன் சுவையைக் கண்டபொழுதும், வேம்பைத் தின்றப் பழக்கத்தினாலே கரும்பைத் தின்னாமல், வேம்பையே தின்னும். அதுபோல, அசத்தைக் கண்ட உயிர்கள், அறிவு உண்டாகி முதல்வனைக் கண்டபொழுதும் பழக்கத்தினாலே அசத்தையே நோக்கி நிற்கும். அந்த நோக்கம் கெடும் பொருட்டு ஸ்ரீ பஞ்சாக்கரத்தை உச்சரிக்க வேண்டும்.

## உதாரண வெண்பா

அஞ்சு எழுத்தால் உள்ளம் அரன் உடைமை கண்டு அரனை
அஞ்சு எழுத்தால் அர்ச்சித்து இதயத்தில் — அஞ்சு எழுத்தால்
குண்டலியில் செய்து ஓமம் கோதண்டம் சானிக்கில்
அண்டனும் சேடனும் அங்கு.

உரைச் சுருக்கம்:— உயிர் சிவனுடைய உடைமை யாகும் என்பதை அஞ்செழுத்தைச் சொல்லிக் காண்க. அந்த அஞ்சு எழுத்தினாலே நெஞ்சிலே சிவனைப் பூசிக்க. அஞ்சு எழுத்தினால் நாபியில் ஓமம் செய்க. புருவ மத்தியில் சிகர, யகர, வகரங்கள் தத்பதம், துவம்பதம், அசிபதம் ஆகியவைதைத் தியானிக்க.

## உதாரண வெண்பா

இந்துவில் பானுவில் இராகுவைக் கண்டாக்குச்
சிந்தையில் காணில் சிவன் தன்னும்—உந்தவே
காட்டாக்கில் தோன்றிக் கனல்சேர் இரும்பு என்ன
ஆள் தானும் ஓது அஞ்சு எழுத்து.

உரைச் சுருக்கம்:— நவக்கிரகங்கள் என்றால் ஒன்பது கிரகங்களாம். அவை சூரியன், சந்திரன், செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி, சனி, இராகு, கேது என்பவைகளாம். இந்த ஒன்பது பேர்களுள் இராகுவையும், கேதுவையும் நாம் காண முடியாது. மற்றை ஏழு கிரகங்களையும் நாம் வானத்தில் பார்க்கலாம். பார்க்க முடியாத இராகுவையும் கேதுவையும் கிரகண காலத்திலே, சூரியனிடத்திலும், சந்திரனிடத்திலும் பார்க்கிறோம். அதுபோல பார்க்க முடியாத முதல்வனை மனமாகிய தாமரைப்பூவிலே அஞ்சு எழுத்தை முறைமையால் வைத்துப் பார்ப்பாயாக. அப்போது கோலை நட்டு கயிற்றால் கடைந்தபோது, கடைந்ததிலிருந்து நெருப்புத் தோன்றுவதுபோல முதல்வன், அங்குத் தோன்றி அறிவுக்கு அறிவாய் விளங்கி நிற்பான். அப்போது உயிர் தன்னுடைய சுதந்திரத்தை விட்டு முதல்வனுக்கு அடிமையாகும். ஆதலால் விதிப்படி அஞ்சு எழுத்தை ஓதுக.

## உதாரண வெண்பா.

மண் முதல் நாளம் மலர்வித்தை கலாரூபம்
எண்ணிய ஈசர் சதாசிவமும் — நண்ணிய
கலை உருவாம் நாதமாம் சத்தி அதன் கண்ணும்
நிலை அதில் ஆம் அச்சிவன் தாள் நேர்.

உரைச் சுருக்கம் :— ஆத்தும தத்துவம் இருபத்து நான்கும் தாமரையின் கொடி. அந்த நாளமாகிய கொடி நாபியிலிருந்து கிளம்பி மேலே நீண்டு எட்டு விரல் நீளமாக இருக்கும். வித்தியா தத்துவங்கள் ஏழும் சிவதத்துவத்திலே உள்ள சுத்த வித்தையும் சேர்ந்து எட்டும் அந்த தாமரைப் பூவுக்கு எட்டு இதழாம். சுத்த தத்துவத்திலே உள்ள ஈசுர தத்துவமும் சதாசிவ தத்துவமும் அறுபத்து நான்கு கேசரமாம். கேசரம் என்பது காயைச் சுற்றி இருப்பதாம். சிவ தத்துவத்திலே உள்ள சத்தி தத்துவம் காயாகும். சிவ தத்துவத்திலே உள்ள நாதம் விதையாகும். ஆதலால் இதயமாகிய தாமரையில் 36 தத்துவங்களும் ஆசனமாக இருக்க சிவனுடைய சத்தி நிலை பெற்றிருக்கும். அதனை தெரிந்து அர்ச்சிப்பாயாக.

ஒன்பதாம் சூத்திரம் முடிந்தது.

### பத்தாம் சூத்திரம் அரும்பதப் பொருள்

பெத்தநிலை—36 கருவிகளோடு கூடிய நிலை; அவனே —அம்முதல்வனே; தானே—உயிரே; நெறி—வழி; முத்திநிலை — 36 கருவிகளையும் விட்ட நிலை; ஏகனாகி— ஒன்றாய், உடனாகி; இறைபணி — முதல்வனின் கட்டளை; வல்வினை—வலிய கன்ம மலம்.

## பத்தாம் சூத்திரம்

அவனே தானே ஆகிய அந்நெறி
ஏகனாகி இறைபணி நிற்க
மலம் மாயை தன்னொடு வல்வினை இன்றே.

கருத்து:— உயிருக்குப் பாசம் நீங்கும் முறைமையைக் கூறுகிறது.

சுருக்கம்:— உயிருக்குப் பெத்தநிலையென்றும், முத்தி நிலை என்றும் இரண்டு நிலை உண்டு. பெத்தநிலை என்பது 36 கருவிகளோடு உயிர் கூடியிருக்கிற நிலையாம். முத்தி நிலை என்பது உயிர் 36 கருவிகளை விட்ட நிலையாம். பெத்த நிலையிலும் இறைவன் உயிருடன் கலந்து நிற்பான். முத்தி நிலையிலும் இறைவன் உயிருடன் கலந்து நிற்பான். முதல்வன் பெத்த நிலையில் உயிருடன் கலந்து நிற்கும்போது உயிரே எல்லாம் செய்கிறது என்று சொல்லும்படி இறைவன் நிற்பான். அந்த உபகாரத்தை உயிர் மறவாமல் முத்தி நிலையிலே உயிர் இறைவனோடு ஒன்றுபட்டு இருந்துகொண்டு எல்லாம் இறைவனே செய்கிறான் என்று இறை பணியில் நிற்கவேண்டும். அப்படி இறை பணியில் உயிர் நின்றால் உயிருக்கு மலமும் இல்லையாகும், மாயையும் இல்லையாகும், கன்மமும் இல்லையாகும்.

## முதல் அதிகரணம் அரும்பதப் பொருள்

ஏகனாகி—ஒற்றுமையாகி; ஈண்டு—இந்த பெத்தநிலை; சிபாதம்—திருஅடி; நாடும் உளம்—எண்ணுகின்ற உயிர்; இறை—முதல்வன்; அவ்விடம்—முத்திநிலை; செருக்கு—கர்வம்; அணையும்—சேரும்.

## முதல் அதிகரணம்

மேற்கோள்:— ஈண்டுப் பரமேசுரன் இவ் ஆன்மாவாய் நின்ற முறைமையால் அவ்விடத்து ஏகனாகி நிற்க என்றது.

மேற்கோளின் உரை:— பெத்தநிலை என்றும், முத்தி நிலை என்றும் இரண்டு வகை. முப்பத்தாறு கருவிகளோடும் உயிர் கூடியிருக்கிற நிலை பெத்த நிலையாம். முப்பத்தாறு கருவிகளையும் விட்டு நீங்கிய நிலை முத்தி நிலையாம்.

இறைவன் பெத்த காலத்திலே உயிராய் நின்ற முறைமையால், உயிர் முத்தி காலத்திலே இறைவனோடு கலந்து நிற்றல் வேண்டும்.

ஏது:— அவ்வாறு நிற்கவே யான் எனது என்னும் செருக்கு அற்று அவன் ஸ்ரீ பாதத்தை அணையும் ஆகலான்.

ஏதுவின் உரை:— உயிர் முத்தி காலத்தில் இறைவனோடு ஒற்றுமைப்பட்டு நிற்றலால் யானும் எனதும் என்று பிரித்து அறிவதற்குக் காரணமாய் இருந்த ஆணவ மலம் நீங்கும். ஆணவ மலம் நீங்கவே உயிர் இறைவனுடைய திருவடியை அடையும்.

## உதாரண வெண்பா

நான் அவன் என்று எண்ணினர்க்கும் நாடும் உளம் உண்டாதல்
தான் என ஒன்று இன்றியே தானதுவாய்—நான் என ஒன்று
இல்என்று தானே எனும் அவரைத் தன்னடி வைத்து
இல்என்று தானும் இறை.

உரைச் சுருக்கம்:— யானே என்று நினைப்பவர்களுக்கு உயிர் உணர்வு மேற்பட்டுத் தோன்றும். அது போல யான் என்றும் அவன் என்றும் உயிரையும் முதல்வனையும் பிரித்து அறிபவர்களுக்கும் உயிர் உணர்வு மேற்பட்டுத் தோன்றும். உயிர் உணர்வு முனைத்துத் தோன்றாமல் எல்லாம் இறைவன் செயலே என்று தெளிந்த அறிவு உடையவர்களை முதல்வன் தன்னுடைய திருவடியில் அடங்கி நிற்கச் செய்வான். செய்து உயிரினுடைய செயல் எல்லாம் தன்னுடைய செயல் என்றும், உயிருக்குச் செய்வது எல்லாம் தனக்குச் செய்வது என்றும், முதல்வன் தானாகவே நிற்பான்.

### இரண்டாம் அதிகரணம் அரும்பதப் பொருள்

இறைபணி—கடவுளின் கட்டளை; வழுவாமல்—தவருமல்; முற்செய்வினை—பிராரத்த வினை; ஆய்ந்தார்—யோசித்தவர்; இங்கு—பெருங்காயம்; கலம்—பாத்திரம்; அச்சு — சிவன்; பண் அமர — பண்ணுதல் பொருந்த; ஓர்பவர்—ஆராய்பவர்; இதமித்தல்—இன்பம் செய்தல்; கதிர்—சூரியன்; அருகு—கிட்ட; பிரவேசியா—தாக்கா; அஞ்ஞானம் — மாயையின் காரியம்; தனு — உடம்பு; இந்திரியம்—பொறி; அரன் உடைமை—முதல்வனுடைய பண்டம்; சார்ந்தார் — சேர்ந்தவர்; சலம் — வஞ்சனை; இங்குளி—பெருங்காயத்தில்; மூண்டிடின் — அதிகப்பட்டால்; அனல்—நெருப்பு; மா—குதிரை; திறன்—வெற்றி; கதம் — கோபம்; ஏலா — ஏற்காத; மெய்ப்பொருள் — சிவம்.

## இரண்டாம் அதிகரணம்

மேற்கோள்:— இனி இறைபணி வழுவாது நிற்க என்றது.

மேற்கோளின் உரை:— முதல்வனுடைய அருளின் வழியே தவருமல் இருக்க என்பதாம்.

ஏது:— அவன் அருளால் அல்லது ஒன்றையும் செய்யான். ஆகவே அஞ்ஞான கன்மம் பிரவேசியா ஆகலான்.

ஏதுவின் உரை:— உயிர் முதல்வனுடைய அருளில்லாமல் ஒரு தொழிலையும் செய்யாது. அருளோடு கூடியே செய்யும். அதனுல் உயிர் அருளின் வழி ஏகனுக நிற்பதற்கு மாயேயமும் கன்மமும் தடை செய்யமாட்டா.

### உதாரண வெண்பா

நாம் அல்ல இந்திரியம் நம்வழியின் அல்ல வழி
நாம் அல்ல நாமும் அரன் உடைமை—யாம்என்னில்

'எத்தனுவில் நின்றும் இறைபணியார்க்கு இல்லை' வினை
முற்செய் வினையும் தருவான் முன்.

உரைச் சுருக்கம்:— இந்திரியங்கள் என்பவை மெய், வாய், கண், மூக்கு செவிகளாம். இந்த இந்திரியங்கள் உயிரல்ல. மாயேயங்களாம். இந்த இந்திரியங்கள் நல்வினை செய்வதற்கும் காரணமாக இருக்கிறது, தீவினை செய்வதற்கும் காரணமாக இருக்கிறது. இந்த இந்திரியங்கள் நல்வினையை அநுபவித்தற்கும் காரணமாய் இருக்கிறது. தீவினைகளையும் அநுபவித்தற்கு காரணமாய் இருக்கிறது. அந்த இந்திரியங்கள் தொழிலில் பொருந்துவதும் முதல்வன் வசமாகவே நின்று தொழில் செய்யும். உயிரின் வழி நின்று தொழில் செய்யாது. ஆதலால் இந்திரியங்கள் எல்லாம் முதல்வனுடைய உடைமையாம். இனி விடயங்கள் என்பவை சப்தம், பரிசம், உருவம், இரசம், கந்தம் என்பவைகளாம். அதாவது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்பவைகளாம். இந்த விடயங்களும் உயிரல்ல. மாயேயங்களாம். இந்த விடயங்கள் தொழில்படுவதும் முதல்வன் வழியாகவே செய்யும். உயிரின் வழி செய்யமாட்டா. ஆதலால் விடயங்களும் முதல்வனுடைய உடைமையாம். உயிரும் முதல்வனுடைய உடைமையாம். எப்படி எனில் முதல்வன் ஞானத்தை உயிருக்கு விளக்கும் போது உயிருக்கு விளங்கியும், முதல்வன் ஞானத்தை உயிருக்கு விளக்காதபோது விளங்காமலும் இருப்பதால் உயிருக்கு சுதந்திரம் இல்லையாம். உயிர் பரதந்திரமாம். ஆதலால் உயிரும் முதல்வனுடைய உடைமையாம். இப்படி பசுவாகிய உயிரும், பாசங்களாகிய இந்திரியங்களும் விடயங்களும் செய்யும் தொழில் எல்லாம் முதல்வனுடைய அருளின் வழியே நின்று செய்யும் செயல் என்று அறிந்து கொண்டு இருக்கவேண்டும். அப்படி இருப்பவர்கள் எந்த உடம்பிலிருந்து எந்த வினையைச் செய்தாலும் அது ஆகாமிய வினையாகும். அது வந்து அவரைப் பற்றமாட்டா.

அதுவும் தவிர பிராரத்தவினையும் அவரைத் தாக்காது. முதல்வன் சந்நிதியில் அது உடல் ஊழாய்க் கழியும்.

### உதாரண வெண்பா

சார்ந்தாரைக் காத்தல் தலைவர் கடனாதல்
சார்ந்தாரைக் காத்தும் சலம் இலனாய்ச்—சார்ந்து அடியார்
தாம் தானாச் செய்து பிறர் தங்கள் வினை தான் கொடுத்தல்
ஆய்ந்தார் முன் செய்வினையும் ஆங்கு.

உரைச் சுருக்கம்:— தலைப்பட்ட குணம் உடையவர்கள் தங்களிடத்தில் யாராவது அடைக்கலம் என்று வந்து அடைந்தால் அவர்களுக்கு உண்டாகிய துன்பத்தை ஒழித்து வேண்டுவனவற்றை அவர்களுக்குக் கொடுத்து காப்பாற்றுவார்கள். அதுபோல முதல்வன் தன்னிடத்தில் அடைக்கலம் எனச் சார்ந்தவரை அவருக்கு உண்டாகிய துன்பத்தை ஒழித்து அவர்களைப் பாதுகாப்பான். முதல்வன் தம்மிடத்தில் வந்து சாராதவர்களைக் காக்க மாட்டான். ஆதலால் முதல்வன் வஞ்சகம் உடையவன் அல்லன். முதல்வன் தன்னைச் சேர்ந்து தனது திருவடித் தொண்டு செய்பவர்களை அவர்கள் செய்த ஆகாமிய வினை அவர்களைச் சேராதபடி செய்வான். தன்னைச் சேராதவர்களுக்கு அவர்கள் செய்த ஆகாமிய வினையை அவர்களைச் சேரும்படி செய்வான். அதுபோலவே சார்ந்தவர்களுடைய பிராரத்த வினைகளையும் அவர்களை அடையாதபடி செய்து, சாராதவர்களுக்கு அவர்களுடைய பிராரத்த வினைகளை அவர்களை அடையும்படி செய்வான்.

### உதாரண வெண்பா

இங்குளி வாங்கும் கலம்போல ஞானிபால்
முன்செய்வினை மாயை மூண்டிடினும்—பின்செய்வினை

மாயையுடன் நில்லாது மற்று அவன்தான் மெய்ப்
பொருளே
ஆய அதனால் உணரும் அச்சு.

உரைச் சுருக்கம்:— ஒரு பாத்திரத்தில் பெருங்காயம் வைக்கப்பட்டு அது எடுக்கப்பட்டபொழுது அந்த பெருங் காயத்தின் வாசனையை, அந்தப் பெருங்காயத்திலிருந்து அந்தப் பாத்திரம் வாங்கிக்கொள்ளும். ஆனாலும் அந்தப் பாத்திரத்திலுள்ள வாசனை மங்கிப்போய் மெலிதாக வீசும். அதுபோல இறைபணியில் நிற்கும் தத்துவ ஞானிக்கு பழகிய பழக்கத்தால் ஒரு காலத்தில் நான், அவன் என் கிற உயிர் உணர்வு உண்டாதலும் உண்டு. அதுபற்றி பிராரர்த்தவினையும் மங்கிப்போய் வாசனை மாத் திரையாய் மூளும். அதுபற்றி உடம்பு முதலிய மாயேய மும், மங்கிப்போய் வாசனை மாத்திரையாய் மூளும். ஆயி னும் அப்படி மூண்டதுபற்றி ஆகாமிய வினை நிலை பெறா மல் மாயேயத்தோடு கெட்டு ஒழியும். இறைபணி நிற்கும் அத்தத்துவ ஞானி சத்தாய் உள்ள சிவமே. ஆயவாற்றால் அச்சிவனையே பார்த்து நிற்பான்.

## உதாரண வெண்பா

நண் அனல் வேவதா நற்றவர்தம் மினும்
பண் அமரமாச் செலுத்தும் பாகரினும்—எண்ணி
அரன் அடி ஓர்பவர் ஐம்புலனில் சென்றும்
அவர் திறன் நீங்கார் அதற்கு.

உரைச் சுருக்கம்:— நெருப்பு சுடாமல் மந்திரத்தால் கட்டப்பட்ட அங்கித்தம்பனத்தால் நெருப்பின் நடுவில் இருந்தும் நெருப்பு சுடாமைக்கு காரணமாகிய நல்ல தவம் உடையார் அந்த நெருப்பின் நடுவினில் கிடப்பினும் தவம் உடையார் தங்களுடைய வெற்றி என்கிற கொள்கையி னின்றும் மாறமாட்டார். அணிகளால் அலங்காரம் செய்

யப்பட்ட குதிரையை ஓட்டுதற்குரிய பாகநூலைக் கற்றவர் அக்குதிரையின்மேல் இருந்து வேகத்துள் அகப்பட்டாலும், அவர் தம் வெற்றியாகிய கொள்கையில் நீங்கமாட்டார். அதுபோல முதல்வன் திருவடியாகிய அச்சையே அறியவல்லவர் முன் செய்த வினையும், மாயையும் வந்து மூண்டபோது ஐந்து வகைப்பட்ட விடயங்களில் சென்றாலும் தம்முடைய திறனிலிருந்து நீங்கிப் பந்தத் தொடரில் அகப்படமாட்டார்.

## உதாரண வெண்பா

சதசத்தாம் மெய்கண்டான் சத்து அருளில் காணின்
இதமித்தல் பாசத்தில் இன்றிக்—கதமிக்கு
எரிகதிரின் முன் இருள்போல் ஏலா அசத்தின்
அருகு அணையார் சற்று அணைவார் ஆங்கு.

**உரைச் சுருக்கம் :—** உயிர் சத்துப் பொருளைச் சார்ந்து, சத்து என்று தன்னை உணர்ந்தும், அந்த உயிர் அசத்துப் பொருளைச் சார்ந்து தன்னை அசத்து என்று உணர்ந்தும், இப்படி சத்தையும், அசத்தையும் சேர்ந்து சதசத்தானேம் என்று தன்னுடைய உண்மையை அறிந்தவன் முதல்வனுடைய திருவருளின் வழியிலே நின்று ஒன்றைக் காண்பான். அப்படி கண்டால் பாசத்தில் இன்பம் வையாமல் முதல்வனையே கூடி நிற்பார். ஐம்புலனிடம் எய்தமாட்டார்.

பத்தாம் சூத்திரம் முடிந்தது.

## பதினோராம் சூத்திரம் அரும்பதப் பொருள்

அயரா — மறவாத; அரன் கழல் — சிவன் திருவடி; அரன்—சிவன்; கழல்—திருவடி.

## பதினோராம் சூத்திரம்

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போலக்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன்கழல் செலுமே.

கருத்து:— உயிர் பரமேசுரனுடைய திருவடியை அணையும் விதம் கூறுகிறது.

உரைச் சுருக்கம்:— காட்டக் காணும் குணமுள்ள கண் ஒரு உருவத்தைக் காணும்படி உயிர் அந்தக் கண்ணோடு கூடி நின்று அந்த உருவத்தைக் கண்ணுக்குக் காட்டுகிறது. அதுவும் அல்லாமல் உயிர் அந்த உருவத்தைக் காண்கிறது. இன்னும் மெய், வாய், மூக்கு, செவிகளுக்கும் உயிர், பரிசம், சுவை, வாசனை, சத்தங்களாகிய விடயங்களை அறிவித்துத் தானும் அறிகிறது. அது போலவே இறைவன் அறிவிக்க அறியும் உயிருக்கு அந்த உயிரோடு கூடி நின்று விடயத்தை உயிருக்கு அறிவிக்கிறான். தானும் அறிகிறான். அப்படி முதல்வன் உயிருக்குக் காட்டி முதல்வனும் காண்கிற உதவியை உயிர் மறவாமல் இறைவனிடத்திலே அன்பு வைக்கவேண்டும். அப்படி அன்பு வைத்தால் அந்த உயிர் இறைவனுடைய திருவடியை அடையும்.

### முதல் அதிகரணம் அரும்பதப் பொருள்

அமைந்து — பொருந்தி; விடயியா — உணராது; உள்குவார் — நினைப்பவர்; ஏகமாய் — ஒன்றாகக் கூடி; உள்கிற்றை—நினைந்ததை; போகமாய்—அனுபவிப்பதாய்; இணையடி—இரண்டு அடி; பொற்பினன் — விளங்குகிறவன்; உற்று—அடைந்து.

### முதல் அதிகரணம்

மேற்கோள்:— ஈண்டு அவனும் அவற்றது விடயத்தை உணரும்.

மேற்கோளின் உரை:— இறைவனும் உயிர்களால் உணரப்படும் விடயத்தை உடன் இருந்து உணர்வான்.

ஏது:— இவ் ஆன்மாக்கள் அவனை இன்றி அமைந்து ஒன்றையும் விடையியா. ஆகலான்

ஏதுவின் உரை:— ஆன்மாக்கள் முதல்வனையில்லாமல் ஒன்றையும் அறியமாட்டா ஆகையால்,

### உதாரண வெண்பா

ஐந்தையும் ஒக்க உணராது அவற்று உணர்வது
ஐந்தும்போல் நின்று உணரும் ஆகலான் ஐந்தினையும்
ஒன்று ஒன்றுப் பார்த்து உணர்வது உள்ளமே எவ்வுலகும்
ஒன்று ஒன்றுப் பார்க்கும் உணர்ந்து.

உரைச் சுருக்கம்:— சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் என்னும் ஐந்தினும், மெய், வாய், கண், மூக்கு, செவி பொருந்தி அறிவதுபோல, அந்த அந்தப் பொறியாய் அடைந்து அறியக்கூடியதை உயிர் அறியும். ஐம்புலன்களையும் ஒரே காலத்தில் அந்த உயிர் உணரமாட்டாது. அவ்வுயிர் ஐந்தினையும் ஒன்று ஒன்றாய் அறிந்து அநுபவிக்கும். சிவம் எல்லா உயிர்களுடைய எல்லா விஷயங்களையும் ஒரே காலத்தில் பொதுவகையால் உணர்ந்து அந்த உயிரோடு கூடி சிறப்பு வகையாலும் அறியும்.

### உதாரண வெண்பா.

ஏகமாய் நின்றே இணையடிகள் ஒன்று உணரப்
போகமாய்த் தான்விளைந்த பொற்பினன் — ஏகமாய்
உள்ளத்தின் கண்ணனன் உள்குவார் உள்கிற்றை
உள்ளத்தால் காணனே உற்று.

உரைச் சுருக்கம்:— இறைவனைச் சார்ந்தபோது சிவமேயாகிய உயிர், முதல்வனோடு ஒற்றுமைப்பட்டு அம்முதல்வனுடைய திருவடிகளை உணரும். அப்படி உணர்ந்த

உயிருக்கு முதல்வன் மேலான இன்பமாய் விளைகின்ற அழகை உடையவனுவான். அப்படி உயிர் உணரும்போது அந்த ஆன்ம ஞானத்தினிடத்திலே முதல்வன் கலந்து நீங்காதவனுவான். ஆகலான் எண்ணுவாருக்கு எண்ணிய பொருளாகி இருப்பவனுகிய இறைவன் தன்னை நினைக்கின்றவர்களுடைய அறிவோடு கூடி நின்று அறிவான்.

**இரண்டாம் அதிகரணம் அரும்பதப் பொருள்.**

ஏத்த—துதிக்க; அன்னியம் இன்றி—வேற்றுமை இல்லாமல்; அருக்கன்—சூரியன்; அல்—இராக்காலம்; பாசத்தார்க்கு — மலம் உடையவருக்கு; வாள் — ஒளி; புக்கு—புகுந்து; துரந்த—ஓட்டின; சலிப்பு—வெறுப்பு; அப்பு—நீர்; பகல்—சூரியன்; அலர்த்தல்—மலரச் செய்தல்; நேசம் — பக்தி; மன்னும் — நிலைபெற்ற; மதி — சந்திரன்; நசித்து—கெட்டு; சேடம்—அடிமை; கழல்—திருவடி; பொன் — சூரியன்; கொண்மூ — மேகம்; திரித்து—கெடுத்து; கப்பு—திரும்பல்.

## இரண்டாம் அதிகரணம்

**மேற்கோள்:—** இனி, பத்தியினுல் மறவாமல் ஏத்த அவனது சீபாதத்தை அணையும் என்றது.

**மேற்கோளின் உரை:—** அன்பினுல் அத்துவித நிலையை மறக்காமல் உயிர் முதல்வனை ஏத்த முதல்வனுடைய திருவடியை அடையும்.

**ஏது:—** அவன் அன்னியமின்றி செய்வோர் செய்திப் பயன் விளைத்து நிற்றலான்.

**ஏதுவின் உரை:—** அம்முதல்வன் வேருய் நில்லாமல் செய்பவர் செய்திக்குத் தக்க பயனை அப்பொழுது, அப்பொழுதே தந்தும் காலாந்தரத்தில் தந்தும் உடன் நிற்றலால் இனிப் பத்தியினுல் மறவாது ஏத்தலே அம்முதல்வனது சீபாதத்தை அணையும் என மேற்கொண்டது.

### உதாரண வெண்பா

அருக்கன் நேர் நிற்பினும் அல்இருளே காணுர்க்கு
இருட்கண்ணே பாசத்தார்க்கு ஈசன்—அருட்கண்ணுல்
பாசத்தை நீக்கும் பகல் அலர்த்தும் தாமரைபோல்
நேசத்தில் தன் உணர்ந்தார் நேர்.

உரைச் சுருக்கம்:— சூரியன், கண் பார்வை இல்லாதவர்களுக்கு ஒரு விதமாகவும், கண் பார்வை உள்ளவர்களுக்கு ஒரு விதமாகவும் இல்லாமல் எல்லாருக்கும் ஒத்த விதமாகவே தோன்றி நிற்கிருன். அப்படி நின்ருலும் கண் பார்வை உள்ளவர்கள் கண்ணுக்கு சூரியன் ஒளியேயாய், ஒளியாகத் தோன்றுகின்ருன். கண் பார்வை இல்லாதவர்களுக்கு இருளேயாய், இருளாகித் தோன்றுகின்ருன். (அதுபோல) இறைவன் பாசம் உடையவர்களுக்கும், பாசம் இல்லாதவர்களுக்கும் ஒத்தே நிற்கிருன். நிற்பினும் மலம் உடையவர்களுக்கு முதல்வன் பாசஞானமாகவே தோன்றுவன். மலம் நீங்கிய ஜீவன் முத்தருக்கு அறிவை விளக்கி நிற்பன். பக்குவமுடைய தாமரையும், பக்குவமில்லாத தாமரையும் குளத்தில் ஒரேவிதமாய் இருப்பினும், சூரியன் பக்குவமில்லாத தாமரையை மலரச் செய்வான். அதுபோல பாசமுடையவர்களுக்கு பாசஞானமாய் தோன்றுவன்; சிவன் முத்தர்களுக்கு பதிஞானமாய்த் தோன்றுவன்.

### உதாரண வெண்பா

மன்னும் இருளை மதிதுரந்தவாறு அன்பின்
மன்னும் அரனே மலம் துரந்து—தன்னின்
வலித்து இரும்பைக் காந்தம் வசம் செய்வாம் செய்தல்
சலிப்பில் விகாரியலன் தான்.

உரைச் சுருக்கம்:— முதல்வனுக்கு உயிரைத் தானுக்கிக்கொள்ளவேண்டிய இச்சை உண்டு. அந்த

இச்சையால் அந்த உயிரோடு அம்முதல்வன் அநாதியே கூடியிருக்கிறன். கண்ணினிடத்திலேயுள்ள இருளை மூன்ரும் பிறைச் சந்திரன் தினந்தோறும் சிறிது சிறிதாக ஓட்டுகிறன். அதுபோல முதல்வன் உயிரினிடத்திலே உள்ள மல சத்தியை அந்த அந்தப் பருவம் தோறும் சிறிது சிறிதாக நீக்குவான். நீக்கி முடிவில் முழுவதும் அழிப்பான். அழித்து சத்தி பதிவித்து உயிரைத் தன்கண் இழுத்துக் கொண்டு தன் வசமாகச் செய்துவரும் செய்கையில் முதல்வனுக்கு எந்நாளும் சலிப்பில்லை. சலிப்பில்லாமையால் விகாரி யாவானும் இல்லை. எதுபோல எனின், காந்தக்கல் இரும்பைத் தன்கண் இழுத்துத் தன்வசம் ஆக்குதலில் சலிப்பும் விகாரமும் இல்லாதது போலவேயாம்.

## உதாரண வெண்பா.

நசித்து ஒன்றின் உள்ளம் நசித்தலால் ஒன்ரு
நசித்து இலதேல் ஒன்ருவது இல்லை — நசித்துமலம்
அப்பு அணைந்த உப்பின் உளம் அணைந்து சேடமாம்
கப்பு இன்ரும் ஈசன் கழல்.

உரைச் சுருக்கம்:— ஆன்மா அரனுடைய திருவடியை அணையும்போது அத்திருவடியை ஆன்மா கெட்டுப்போய் அணையமாட்டாது. ஏன்எனின் கெட்டால் சேரமாட்டாது. ஆன்மா கெடாது அணையும் என்ருல் முதல்வனும் ஆன்மாவுமாகி இருபொருளாய் நிற்கும். ஆதலால் ஒருபொருள் ஆகமாட்டாது. உப்பு தன்னுடைய கட்டியாய் உள்ள உருவம் நீங்கி நீரில் ஒன்ருவதுபோல ஆன்மா சகசமலம் நீங்கி அரனுடைய திருவடிக்கு அடிமையாம். அடிமையான அந்த உயிர் மீளத் திரும்பாது. ஒரு படி உப்பும், ஒரு படி தண்ணீரும் கூடினபோது ஒரு படிக்கு மிகுந்து இரண்டு படியாகாமலும், ஒரு படியளவில் நீக்க ஒண்ணுததாயும் இருப்பதுபோல முதல்வனும் உயிரும் கலந்து நீக்கமற நிற்கும்.

## உதாரண வெண்பா

பொன் வாள்முன் கொண்மூவில் புக்கு ஒடுங்கிப்போய்
தன்வாளே எங்குமாம் தன்மை போல் — முன்வாள்
மலத்துள் மறைந்து உள்ளம் மற்று உலகை உண்ணும்
மலந் திரிந்துச் செல்லும் வரத்து.

உரைச் சுருக்கம் :— சூரியன் காலையில் மேகக் கூட்டத்துள் மறைந்து ஒளியிழந்து நிற்பான். மேகக் கூட்டம் கொஞ்சம் நீங்கியபோது, தன் ஒளி கொஞ்சமாய் ஒடுங்கித் தோன்றுவான். மேகம் முழுதும் நீங்கியபோது தன் ஒளி எங்குமாய்த் தோன்றும். அதுபோல உயிர் அநாதியே தன்னுடைய அறிவு மலத்துள் மறைந்து கேவலமாய் இருக்கும். பின்பு கருவிகளோடு கூடி ஏகதேச அறிவு விளங்கி ஐம்புலன்களை விடையிக்கும். இப்படி சகலா அவத்தைப்பட்டு பின்பு மலத்தை முதல்வன் அருளால் பற்றறக் களைந்து வியாபகமாய் அறிவு விளங்கி முதல்வனுடைய சிபாதத்தையணைந்து சுத்தப்படும். இந்த வெண்பா உயிர் அடையும் கேவலா அவத்தை, சகலா அவத்தை, சுத்தா அவத்தைகளைக் கூறிற்று.

பதினோராம் சூத்திரம் முடிந்தது.

## பன்னிரண்டாம் சூத்திரம் அரும்பதப் பொருள்

செம்மை—சிவப்பு; செம்மலர்—சிவந்த பூ; நோன்றாள்—வலிமையுள்ள திருவடி; கழீஇ—கழுவி; சீவன்முத்தர்—உயிரோடு இருந்தும் பற்றற்றவர்; மும்மலம்—ஆணவம், மாயை, கன்மம்; மரீஇ—கூடி; மால்—மயக்கம்; தொழும்—வணங்கும்; நேயம்—அன்பு; சிந்தை—மனம்; சேரல் ஒட்டா—அடையாதபடி; மலிந்தவர்—நிறைந்தவர்.

## பன்னிரண்டாம் சூத்திரம்

செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மால் அற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயம் தானும் அரன் எனத்தொழுமே.

*கருத்து:— சிந்தைக்கு எட்டாத கடவுளை சிந்தையில் கண்டு வழிபடும் விதத்தைக் கூறுகிறது.*

**உரைச் சுருக்கம்:—** *கடவுளுடைய திருவடி எங்கும் விரிந்து விளங்கியது. அந்தத் திருவடியைச் சேரவொட்டாமல் மும்மலங்களாகிய அழுக்குகள் மறைக்கின்றன. இந்த மும்மலங்கள் எவை என்றால் ஆணவம், மாயை, கன்மங்களாம். இந்த மும்மல அழுக்கைக் கழுவ ஞான நீர் வேண்டும். அந்த ஞான நீரை அடைவதற்காக மும்மல அழுக்கைக் கழுவிய சீவன் முத்தர்களாய் உள்ளவர்களோடு கூடவேண்டும். பின் அப்படிக் கழுவி கூடி மல மயக்கம் நீங்க அவருடைய வேடத்தையும் அரன் எனவே கண்டு வழிபடும். அதுவும் அன்றி ஆலயங்களையும் அங்கு உள்ள உருவங்களையும் அரன் எனவே கண்டு வழிபடும் என்றது. அடியார்கள் வேடத்தை வழிபடுக என்றதால் வழிபடும் இடம் கூறப்பட்டது. ஆலயத்தை வழிபடுக என்றதால் இடத்திலுள்ள பொருள்கள் கூறப்பட்டது.*

### முதல் அதிகரணம் அரும்பதப் பொருள்

*களைக—நீக்குக; மும்மலங்கள் — ஆணவம், மாயை, கன்மம்; உணர்த்தாது—அறிவிக்காது; அஞ்ஞானம்—மாறி அறிவது; கான்மியம்—கன்ம மலம்; கண்ணிய—அறிவதாகிய.*

## முதல் அதிகரணம்

**மேற்கோள்:—** ஈண்டு ஆணவம் மாயை கான்மியம் என்னும் மலங்களைக் களைக.

மேற்கோளின் உரை:— ஆணவம், மாயை, கன்மம் என்கிற மும்மலங்களையும் நீக்குக.

ஏது:— அவைதாம் ஞானத்தை உணர்த்தாது அஞ்ஞானத்தை உணர்த்தும் ஆகலான்.

ஏதுவின் உரை:— அந்த ஆணவம், மாயை, கன்மங்கள் அறிவைத் தராது. அறியாமையைத் தரும்.

## உதாரண வெண்பா

புண்ணிய பாவம் பொருந்தும் இக்காமியமும்
மண்முதல் மாயைகாண் மாயையும்—கண்ணிய
அஞ்ஞானம் காட்டும் ஆணவமும் இம்மூன்றும்
மெய்ஞ்ஞானிக்கு ஆகா விடு.

உரைச் சுருக்கம்:— புண்ணியம் செய்வதற்குக் காரணமாய் இருப்பது கன்ம மலம். பாவம் செய்வதற்கும் காரணமாய் இருப்பது கன்ம மலம். இன்னும் புண்ணியம் செய்ததின் பயனாய் இருப்பது கன்ம மலம். பாவம் செய்ததின் பயனாய் இருப்பதும் கன்ம மலம். அதாவது விருப்பும் வெறுப்பும் ஆகும். இனி மாயை என்பது நிலம் என்கிற பிருதிவிதத்துவம் முதல் மோகினி ஆகிய மாயை என்கிற தத்துவம் வரையிலுள்ள 24 தத்துவங்களும் ஆம். ஆணவ மலம் என்பது அஞ்ஞானத்தைத் தருவதாய் உயிருடன் பொருந்தி இருக்கிறதாம். இந்த ஆணவம், மாயை, கன்மங்கள் மெய்ஞ்ஞானிகளுக்குக் கூடாது. ஆகையால் இந்த மூன்றையும் விட்டுவிடவேண்டும்.

## இரண்டாம் அதிகரணம் அரும்பதப் பொருள்

இணங்குக—கூடுக; வீழ்க்கும்—தள்ளும்; திறம்—சொல்; அறப்பித்து—அறுத்து; மெய்த்தவரை — தத்துவ ஞானிகளை; பரன் உணர்வு — சிவஞானக் கண்ணால் அறியும் அறிவு; விபரீத உணர்வு — மாறுபட்ட அறிவு;

மேவா—அடையமாட்டார்; சேர்வை—சேருதல்; அல்லாதார்—பாசம் உடையவர்; சிறப்பில்லார்—அன்பில்லாதவர்.

## இரண்டாம் அதிகரணம்

மேற்கோள்:— இனிச் சிவபக்தர்களோடு இணங்குக.

மேற்கோளின் உரை:— அன்பர்களோடு நட்புக் கொள்க.

ஏது:— அல்லாதார் அஞ்ஞானத்தை உணர்த்துவார் ஆகலான்.

ஏதுவின் உரை:— பாசம் உடையவர்கள் விபரீத அறிவைப் போதிப்பார். ஆதலால்.

### உதாரண வெண்பா

மறப்பித்துத் தம்மை மலங்களின் வீழ்க்கும்
சிறப்பில்லார் தம்திறத்துச் சேர்வை—அறப்பித்துப்
பத்தர் இனத்தாய் பரன் உணர்வினால் உணரும்
மெய்த்தவரை மேவா வினை.

உரைச் சுருக்கம்:— முதல்வனிடத்தில் அன்பு இல்லாதவர் முதல்வன் காட்டியும் கண்டும் உபசரிக்கும் ஞானக் கண்ணை மறைப்பார்கள். தீய வழியில் செலுத்துவார்கள். பிறவிக் குழியிலே தள்ளுவார்கள். துன்பப் படுத்துவார்கள். ஆதலால் அன்பில்லாதவருடைய செயற்கை அறும்படியாகச் செய்ததை முதல்வனிடத்திலே அன்புடையவர்கள் மாற்றி முதல்வனிடத்திலே நினைவை உண்டாக்குவார்கள். அன்பில்லாதார் தள்ளிய பிறவிக் குழியில் இருந்து தூக்குவார்கள். நல்ல வழியிலே செலுத்துவார்கள். அன்பில்லாதவர்கள் படுத்தின துன்பத்தை நீக்கி வாழ்விப்பார்கள். ஆதலால் உண்மைத் தவம் உடையவர்களின் வார்த்தையிலே அன்பு வைத்து அவர்

களின் நிலைகளை எல்லாம் உறுதியாகப் பிடித்துக்கொண்ட மெய்த்தவமுடையவர்களை வினைகள் வந்து கூடமாட்டா. வாதிக்கவும் மாட்டா.

### மூன்றும் அதிகரணம் அரும்பதப் பொருள்

வழிபடுக — வணங்குக; பிரகாசம் — வெளிப்பட்டுத் தோன்றுதல்; அப்பிரகாசம்—வெளிப்பட்டுத் தெரியாமை; அல்லாத இடம் — திருவேடமும் சிவாலயமும் இல்லாத இடம்; உரு—வடிவம்; உணரும்—அறியும்; நேசத்தார் —அன்புடையவர்; ததி—தயிர்; பாசத்தார்—பாசமுடையவர்.

## மூன்றும் அதிகரணம்

**மேற்கோள்:— இனி பத்தரது திருவேடத்தையும் சிவாலயத்தையும் பரமேசுரன் எனக்கண்டு வழிபடுக.**

**மேற்கோளின் உரை:—** சிவனடியாருடைய அடையாளத்தைக் கண்டு அந்த அடியார்களைப் பரமேசுரன் என்றே எண்ணி வழிபடுக. சிவாலயத்திலுள்ள வடிவங்களைக் கண்டு அந்த வடிவங்களை பரமேசுரன் என்றே எண்ணி வழிபடுக.

**ஏது:— அவன் மற்று இவ்விடங்களில் பிரகாசமாய் நின்றே அல்லாத இடத்து அப்பிரகாசமாய் நிற்றலான்.**

**ஏதுவின் உரை :—** அந்தப் பரமேசுரன் அடியாரிடத்திலும், ஆலயத்திலும் தயிரின் நெய் போல விளங்கித் தோன்றுவன். இரண்டுமல்லாத இடத்திலே பாலின் நெய்போல வெளிப்படாது இருத்தலால் இனிப் பத்தரது திருவேடத்தையும், சிவாலயத்தையும் பரமேசுரன் எனக் கண்டு வழிபடுக.

### உதாரண வெண்பா.

**தன்னுணர வேண்டித் தனதுருவைத் தான் கொடுத்துத்
தன்னுணரத் தன்னுள் இருத்தலால்—தன்னுணரும்**

**நேசத்தர் தம்பால் நிகழும் ததி நெய்போல்
பாசத்தார்க்கு இன்றும் பதி.**

**உரைச் சுருக்கம்:—** 1) சிந்தைக்கு அகப்படாத முதல்வன் உலகத்தார் தன்னை அறிதற்காகத் தன்னுடைய திருநீற்றையும் உருத்திராக்க மாலை முதலிய அடையாளங்களையும் அன்பர்களுக்குக் கொடுத்தபடியாலும், 2) அந்த அன்பர்கள் முதல்வனாகிய தன்னை சிவோகம் பாவனையால் அறியச் செய்தலானும்; 3) அப்படி ஒரு குறியிலே வைத்து உணர்கின்ற அந்த அடியார்களை முதல்வன் தன்னுடைய வியாபகத்துக்குள் இருத்துதலானும், 4) குறி இறந்து நின்று சிவனை அன்பு நெறியால் உணரும் அன்பர்களிடத்திலும், இந்த நால்வரிடத்திலும் தயிரின் நெய் போல விளங்கித் தோன்றுவார். இந்த நான்கு விதங்களும் அல்லாத பாசத்தார் இடத்திலே பாலின் கண் நெய் போல விளங்காது நிற்பார்.

## உதாரண வெண்பா

**கண்டது ஒரு மந்திரத்தால் காட்டத்தில் அங்கிவேறு
உண்டல்போல் நின்று அங்கு உளதாமால்—கண்டஉருத்
தான் அதுவாய் அன்று ஆனுன்தான் அதுவாய் தோன்றுனே
தான் அதுவாய் காணும் தவர்க்கு.**

**உரைச் சுருக்கம்:—** விறகுக் கட்டையின் உள்ளே நெருப்பு இருக்கிறது. ஆனல் அந்த நெருப்பு நமது கண்ணுக்குத் தோன்றுகிறதில்லை. ஒரு விறகை எடுத்து நடுவில் குழித்து வேறு ஒரு விறகை எடுத்து அக்குழியில் நட்டுக் கடைந்தால் அக்கட்டையில் மறைந்து இருந்த நெருப்புக் கண்ணுக்கு விளங்கித் தோன்றும். கடையாதபோது அந் நெருப்பு விளங்கித் தோன்ருது. தம்மால் அறியப்பட்டதொரு மந்திரத்தாலே ஒரு வடிவிலேயிருந்து முதல்வன்

விளங்கித் தோன்றுவான். அம்மந்திரம் இல்லாதபோது விளங்கித் தோன்ருன். கலப்பிலே தாவர வடிவமாயும் அஃது வல்லாமல் வேறு பொருளுமாயும் இருக்கின்ற முதல்வன் அந்த தாவர வடிவமே முதல்வனைக் காணப்பெறும் தவம் உடையார்க்கு அப்படியே விளங்கித் தோன்றுவான்.

## பன்னிரண்டாம் சூத்திரம் புறனடையாகிய நான்காமதிகரணம் அரும்பதப் பொருள்.

புருடன்—ஆன்மா; பேதம்—வேறு வேருக உள்ளது; அபேதம்—இரண்டு பொருள் ஒன்ருய் இருப்பது; பேதா பேதம்—வேருகவும், ஒற்றுமையாகவும் இருப்பது; பவம்—பிறப்பு; விஞ்ஞான கலர் — ஆணவ மலம் மாத்திரம் உடையவர்; சகலர்—ஆணவம், மாயை, கன்மம் மூன்று முடையவர்: அத்துவிதம்—இரண்டன்மை; அகண்டம்—எல்லாப் பொருள்களுமா; தைவம் — சிவத்தின் அடிமை; விளைதலால்—உண்டாதலால்; அந்தரா—சிந்தாந்தத்தை யுடையவனே; பிரளயா கலர்—ஆணவம் மாயை இரண்டும் உடையவர்; தான் தானச் செய்தல்—சீவனைச் சிவமாக்குதல்; நேர்நோக்க—மருள் பார்வையை நீக்கி அருள் பார்வையால் பார்த்தல்; சிந்தை— அறிவு; அத்துவிதி—அத்துவித ஞானத்தை யுடையவன்; அனைத்தும்—எல்லாம்; பசுத்துவம்—ஆன்மாவின் தன்மை; சிவத்துவம்—சிவத்தன்மை; அசத்து—விருப்பு வெறுப்பு முதலிய; நிகழும்—உண்டாகும்.

## பன்னிரண்டாம் சூத்திரம் நான்காம் அதிகரணம்.

**மேற்கோள்:-** இனி இவ்விடங்களில் வழிபடுக என்றது.

**மேற்கோளின் உரை:—** சிவனியாருடைய திருவேடமும், சிவாலயமும் ஆகிய இரண்டு இடத்திலும் வழிபாடு செய்க என்பதாம்.

**ஏது:- நரம்பு, நாடி முதலியவற்றை; தான் அதுவதுவாய் வரும்புருடன் அவையாகாவாறு அப்புருடனும் ஆகலான்.**

**ஏதுவின் உரை :—** *கலந்து இருத்தலால் நரம்போ உயிர்? நாடியோ உயிர்? எலும்போ உயிர்? சீழோ உயிர்? கோழையோ உயிர்? என்று ஆராய்ந்து பார்ப்பவர்களுக்கு நரம்பும் உயிரல்ல, நாடியும் உயிரல்ல, எலும்பும் உயிரல்ல, சீழும் உயிரல்ல, கோழையும் உயிரல்ல. இவைகளுக்கு வேருக உயிர் ஒன்று உண்டு என்று காண்பார்கள். அது போல கலப்பினுலே உயிருக்கு உயிராய் இருக்கிற முதல்வன் உயிருக்கு வேருக உள்ளான். ஆதலால் இவ்விடங்களில் வழிபடுக என்பதாம்.*

## உதாரண வெண்பா.

**அதுஇது என்றது அதுஅல்லான் கண்டார்க்கு**
**அதுஇது என்றதையும் அல்லான் — பொதுஅதனில்**
**அத்துவிதம் ஆதல்அகண்டமும் தைவமே**
**அத்துவிதி அன்பில் தொழு**

**உரைச்சுருக்கம் :—** *முதல்வன் உலகத்தில் உள்ள எல்லாப் பொருளிலும் கலந்து நிற்பதால் அந்தப் பொருள் என்றும், இந்தப் பொருள் என்றும் வேருகப் பிரிக்க முடியாதவன். அந்தப் பொருளே என்று ஒரு பொருளாகச் சொல்லவும் முடியாதவன். அந்தப் பொருளாகிய இந்தப் பொருள் என்றும் சொல்லவும் முடியாதவன். இந்த மூன்றுக்கும் பொதுவாக எல்லாப் பொருளிலும் முதல்வன் கலந்து நிற்றலால் எல்லாம் அவனுடைய வடிவே. ஆயினும் அவ்வடிவுகள் எல்லாவற்றுள்ளும் அடியார் வேடமும், ஆலயமும் அன்பு விளையும் இடமாம். ஆதலால் அவ்விரண்டு இடத்திலும் வழிபடுக.*

## உதாரண வெண்பா

வினையால் அசத்து வினைதலால் ஞானம்
வினைதீரின் அன்றி வினையா — வினைதீர
ஞானத்தை நாடித் தொழவே அது நிகழும்
ஆனத்தால் அன்பில் தொழு.

உரைச்சுருக்கம் :— பிராரத்த வாசனை உண்டானால் விருப்பும வெறுப்பும உண்டாகும். அந்த இரண்டும் உண்டான உடனே மாயைகளும் தோன்றும். அது தோன்றின உடனே விபரீத உணர்வு உண்டாகும். இப்படி வந்து கூடும் இவைகளுக்கெல்லாம் மூல காரணம் பிராரத்த வாசனையே. இந்தப் பிராரத்த வாசனை நீங்கினால்தான் ஞானம உண்டாகும். ஆகையினாலே பிராரத்த வாசனை அடியோடு நீங்கும பொருட்டு மெய்யுணர்வு உடையவர்களை நாடி வழிபட வேண்டும். ஆனத்தால் அவர்களை அன்பினால் வழிபடுவாயாக.

## உதாரண வெண்பா

தன்னை அறிவித்துத் தான்தானச் செய்தானை
பின்னை மறத்தல் பிழையலது — முன்னவனே
தானேதா னச்செய்துந் தைவம் என்றுந் தைவமே
மானே தொழுகை வலி.

உரைச் சுருக்கம் :— ஆணவம், மாயை, காமியம் என்னும் மூன்றினோடு உயிரினுடைய உண்மையையும் உயிருக்கு தெரிவித்த முதல்வனுடைய உதவியை உயிர் மறத்தல் ஆகாது. அதனை மறந்தால் அறியாமையால் செய்த குற்றம் போல அல்ல. இது பரிகாரத்தால் நீங்காத ஒரு குற்றம் ஆகும். ஆதலால் முதல்வன் உயிரைத் தன்னைப் போல சிவமாகச் செய்தாலும் உயிருக்கு சுதந்திரம் கிடையாது. ஆனாலும் முதல்வனுடைய உபகாரத்தை இல்லா

மல் வாழமாட்டாதாய் உள்ள அடிமையாகிய உயிர் எக்காலத்திலும் அடிமையேயாம். தன்னைப்போலச் செய்த அந்த முதல்வனை வழிபடுதலே உயிருக்கு வலிமையைத் தரும்.

## செய்யுள்

**சிவம் என்னும் அந்தரசிந்தை நேர் நோக்கப்**
**பவம் இன்றும் கண்வா சகத்தில் — சிவம் உண்டாம்**
**ஒன்றும் இரண்டும் மலத்தார்க்கு இங்கு ஒண்குருவால்**
**இன்று இந்நூன் மும்மை மலர்க்கு.**

**உரைச்சுருக்கம் :—** *சீவன் என்னும் தன்மையில் இருந்து நீங்கி சிவம் என்று சொல்லப்படும் சித்தாந்தத்தை உடைய மாணவனே ஆணவ மலம் மாத்திரம் உள்ள விஞ்ஞான கலருக்கு அவருடைய அறிவின் கண் முதல்வன் தன்மையில் நின்று அருள் பார்வையால் நோக்கி சிவத்துவத்தை விளக்குவார். ஆணவமும் கன்மமும் ஆகிய இரண்டு மலங்களையுடைய பிரளயாகலருக்கு தேவ குருவாக எதிரில் நின்று செய்யும் திருநோக்காலும், பரிசத்தாலும், வாக்காலும் தீக்கை செய்து சிவத்துவத்தை விளக்குவார். இவ்விருவர் நிற்க ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மும்மலங்களையுடைய சகலருக்கே இந்த உலக அநுபவம் உடையதேசிகராலே போதிக்கத் தக்கதாகும் இச் சிவஞானபோதம் என்கிற நூல்.*

## பன்னிரண்டாம் சூத்திரம் முடிந்தது.

## சிவஞானபோதச் சிற்றுரைச் சுருக்கம் முடிந்தது.

மெய்கண்ட தேவர் திருவடி வாழ்க.

## ❀ பிழைத் திருத்தம் ❀

| பக்கம். | உதாரண வெண்பா. | பிழை - திருத்தம். |
| --- | --- | --- |
| 22 | ,, | 2வது வரி<br>உனைகான்-உனைகாண் |
| 28 | ,, | 2வது வரி<br>கட்டு-கெட்டு |
| 55 | ,, | 4வது வரி<br>அவன் அரன் |
| 58 | ,, | 4வது வரி<br>ஏப்பு-ஒப்பு |
| 64 | ,, | 2வது வரி<br>இலாமை-இலான் |
| | ,, | 4வது வரி<br>பற்று-மற்று |
| 86 | ,, | 1வது வரி<br>கண்டாக்கு-கண்டாங்கு |
| | | 2வது வரி<br>சிவன்தன்னும்-<br>சிவன் கண்ணும் |
| 94 | | 4வது வரி<br>சற்று அணைவார்-<br>சத்து அணைவார் |
| 100 | | 1வது வரி<br>போய்-போயகல |
| 101 | 12சூத்திரம் | 4வது வரி<br>அறன்-அரன் |
| 102 | உதாரண வெண்பா முதலடி | இக்காமியமும்-இக்கான்மியமும் |



